

# CHANDAMAMA

PRESENTS

## "BE A DREAM CHILD" CONTEST

The President of India, Dr. A.P.J.Abdul Kalam, in the course of his interaction with children, has been exhorting them to DREAM for the future of India and its people. Recently, at the end of his address to the nation on January 25, he administered an oath to a group of children. For the sake of our young readers, the 10-point oath is reproduced below.

1. I will pursue my education or work with dedication and I will excel in it.
2. I will teach at least 10 illiterate persons to read and write.
3. I will plant at least 10 saplings and shall ensure their growth through constant care.
4. I will visit rural and urban areas, and permanently wean away at least five persons from addiction and gambling.
5. I will constantly endeavour to remove the pain of my suffering brethren.
6. I will not support any religious, caste or language differentiation.
7. I will be honest and will endeavour to make a corruption free society.
8. I will work for becoming an enlightened citizen, and make my family righteous.
9. I will always be a friend of the mentally and physically challenged and will work hard to make them feel normal, like the rest of us.
10. I will proudly celebrate the success of my country and my people.

Chandamama invites the children of India to write one para each about what they have achieved **in fulfilling the ten points by the next Independence Day.** The contest is open to children between 8 and 15.

ENTER THE CONTEST AND WIN ATTRACTIVE PRIZES!

THREE BEST ENTRIES WILL BE PUBLISHED IN OUR NOVEMBER 2004 ISSUE.

CLOSING DATE : August 31 2004

Watch for instructions and details of prizes in the April 2004 issue

பங்கு பெறுங்கள்

nutrine & அம்புலிமாமா

# ஒலிம்பிக் புதிர்ப் போட்டி

1வது பரிசு



கேமராக்கள்

2வது பரிசு



கேல்குலேட்டர்கள்

விசேஷப் பரிசு



ஆக்சா கம்ப்யூட்டர்

2004ம் ஆண்டு மே மாதம் அறிமுகப்படுத்தப் பட்ட நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி தொடர்ந்து ஆறு மாதங்களுக்கு சந்தமாமா இதழில் வெளிவரும். கீழ்க்காணும் கேள்விகள் ஒலிம்பிக் பந்தயங்களைப் பற்றிய உங்கள் ஆர்வத்தையும் அறிவையும் தூண்டுவனவாக அமையும். அவற்றுக்கு சரியான விடைகளைத் தேர்ந்தெடுத்து, நுழைவுக் கூப்பனைப் பூர்த்தி செய்து, நியூட்ரின் சாக்லெட் எக்ளேர்ஸின் ஐந்து மேலுறைகளுடன் சேர்த்து போட்டியிறுதித் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்குமாறு கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும் **நியூட்ரின் சந்தமாமா பரிசுப் போட்டி, சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபன்ஸ் ஆபிஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத் தாங்கல், சென்னை-600 097.**

இது ஒரு அகில இந்தியப் போட்டி. ஒவ்வொரு மாதமும் சந்தமாமா இதழில் வெளி வரவிருக்கும் இந்தப் போட்டியில் கலந்து கொள்வீர். 3 கோனிகா கேமராக்கள், 10 கால்குலேட்டர்கள், 50 நியூட்ரின் ஃப்ளீட் ஜாம்பர்கள் ஆகியவை முறையே முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளாக ஒவ்வொரு மாதமும் வழங்கப்படும். இவ்வாறு ஐந்து மாதங்கள் போட்டி நடந்த பிறகு, 6வது மாதம் நடக்கவிருக்கும் மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெறும் அதிருஷ்டசாலியான நபருக்கு மற்ற பரிசுகளுடன் விசேஷப் பரிசாக ஒரு கம்ப்யூட்டர் வழங்கப்படும். இந்த விசேஷப் பரிசைப் பெறும் நபர் 6 போட்டிகளிலும் கலந்து கொண்டவராக இருக்க வேண்டும். மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெறும் நபர்களுக்கு டிசம்பர் மாதம் தபால் மூலம் செய்தி அனுப்பப்படும்.

## நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி-2

**உங்களுக்குத் தெரியுமா?**



**ஒலிம்பிக் தீப்பந்தம் கடந்த மார்ச் மாதம் 25ந் தேதி ஒலிம்பியாவில் ஏற்றப்பட்டு, ஒலிம்பிக் பந்தய ஜாவெலின் விளையாட்டு வீரரான கோஸ்டாஸ் காட்சியோயனிஸ்ட் கொடுக்கப் பட்டுள்ளது. ஜூன் 10ந் தேதி ஒலிம்பிக் தீப்பந்தம் இந்தியா வழியாகச் செல்ல இருக்கிறது.**

கீழ்க்கண்ட கேள்விகளை கவனத்துடன் படித்து, அதற்கான சரியான விடைகளை அருகிலுள்ள சதுரப் பெட்டியில் (✓) குறியிட்டு அனுப்பவும்.

1. மராத்தன் ஓட்டப் பந்தயத்தில் இதுவரை நடந்த ஒலிம்பிக் போட்டி நிகழ்ச்சிகளில் மிக விரைவாக ஓடி சாதனை நிகழ்த்த எடுத்துக் கொண்ட நேரம் எவ்வளவு?
   ☐ 2 மணி 19 நிமிடம் 21 வினாடி ☐ 2 மணி 9 நிமிடம் 21 வினாடி
   ☐ 2 மணி 9 நிமிடம் 41 வினாடி
2. ஒலிம்பிக் ஆண்களின் 'லாங் ஜம்ப்' நிகழ்ச்சியில் சாதனை புரிந்துள்ள நபர் யார்?
   ☐ சார்லஸ் ஆஸ்டன் ☐ ஜீன் காஸ்ட்டிஃபோன் ☐ பாப் பீமன்
3. ஒலிம்பிக் மகளிர் 'ஹை ஜம்ப்' நிகழ்ச்சியில், அதிகபட்சம் தாண்டப்பட்ட உயரம் எத்தனை?
   ☐ 1.95 மீட்டர் ☐ 2.00 மீட்டர் ☐ 2.05 மீட்டர்
4. 1988ம் ஆண்டு ஆசியாக கண்டத்தில் எந்த நகரத்தில் ஒலிம்பிக் பந்தயம் நடத்தப்பட்டது?
   ☐ டோக்கியோ ☐ சியோல் ☐ பெய்ஜிங்
5. இந்த இதழில் வெளிவந்துள்ள நியூட்ரின் விளம்பரத்தில், ஆங்கில எழுத்தான 'T' எத்தனை முறை வருகிறது?
   ☐ 10 ☐ 16 ☐ 14

**போட்டியின் விதிமுறைகள்:** ● நியூட்ரின், சந்தமாமா நிறுவனங்களில் பணிபுரிபவர்களும் அவர்களது உறவினர்களும் இப்போட்டியில் பங்கு பெறக் கூடாது.

**கடைசித் தேதி 30 ஜூன் 2004**

பெயர்: ..........................................................................

வயது: ................ வகுப்பு: .................... பிறந்த தேதி: ..........................

வீட்டு முகவரி மற்றும் பின் கோடு : ..................................................

..........................................................................

கையொப்பம்: ..........................................................................







India's largest selling sweets and toffees.

அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 107 பிப்ரவரி : 2004 புன்னகை : 12



**SUBSCRIPTION**

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandmama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/-
இந்தியாவிற்குள் ரூ.130/- புக்போஸ்டில் உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# ஒரு மகத்தான நிகழ்ச்சி

நமது பாரத நாட்டில் நிகழ்ந்த ஒரு மகத்தான நிகழ்ச்சியை உலகம் முழுவதும் கண் கொட்டாமல் ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தது. உலகிலேயே மிகப் பெரிய ஜனநாயக நாடான பாரதத்தில் தேர்தல்கள் வெற்றிகரமாக நடைபெற்றதே மேல் குறிப்பிடப்படும் மகத்தான நிகழ்ச்சியாகும். நாட்டின் பாராளுமன்றத்திற்கும் ஒரு சில மாநிலங்களின் சட்ட சபைகளுக்கும் ஒரே சமயத்தில் தேர்தல் நிகழ்த்துவது என்பது ஒரு மாபெரும் சாதனை. ஆயிரக்கணக்கான லட்சக்கணக்கான ஓட்டுச் சாவடிகளை நாடெங்கும் தயார் செய்து, தேர்தலுக்கு வேண்டிய வாக்குச் சீட்டுக்களையும் வாக்கு இயந்திரங்களையும் அந்த இடங்களுக்குக் கொண்டு சென்று, பல்லாயிரக் கணக்கான தேர்தல் நடத்துனர்களை நியமித்து அமைதியான முறையில் தேர்தலை நடத்திக் காட்டுவது உண்மையாகவே ஒரு சாதனைதான்.

அன்னியர் ஆதிக்கத்தில் சிக்கியிருந்த பல நாடுகள் இருபதாம் நூற்றாண்டில் சுதந்திரம் பெற்றன. ஆனால் அவற்றுள் பெரும்பான்மையான நாடுகள் தங்களுக்குக் கிடைத்த சுதந்திரத்தை சரிவரப் பயன்படுத்திக் கொள்ளாமல் சர்வாதிகார ஆட்சியிலும் ராணுவ ஆட்சியிலும் அகப்பட்டுத் தவிக்கும் போது, நமது பாரதம் மட்டும் 50 ஆண்டுகளுக்கும் மேலாக ஜனநாயகப் பாதையில் வெற்றி நடை போடுவது நமக்குப் பெருமை தரும் விஷயம். ஒன்று மட்டும் நாம் நினைவு வைத்துக் கொள்ள வேண்டும். திரு அரவிந்தர் சொல்லியிருப்பது போல், பாரதம் என்பது வெறும் பூமி மட்டுமில்லை. புண்ணிய பூமி, இது நாம் வணங்கும் தெய்வம், நமது தாய். ரத்தம் சிந்திக் கிடைத்த சுதந்திரத்தை, ஜனநாயக முறையில் எதிர்காலத்திலும் ஒழுங்காகக் காக்க வேண்டும். ஜாதி, மத அடிப்படையில் வாக்களிக்காமல் தகுதியான நபரை நமது மனசாட்சியின் படி வாக்களிப்பதுதான், இப்போது எதிர்காலத்தில் நம்மை எதிர் நோக்கியுள்ள தலையாய கடமை.

ஆசிரியர் : விஸ்வம்





மொட்டு மலர்ந்ததும்...

# ஏழைகளின் பங்காளன்



செல்வந்தர்களுக்கே உரிய வசதியான வாழ்க்கையின் சுகங்களை அனுபவிப்பவர்களுக்கு, ஏழைகளின் துயரம் நிறைந்த வாழ்வைப் பற்றிப் புரிந்து கொள்வது கடினம். ஆனால் அப்படிப்பட்ட செல்வச் செழிப்பால் வளர்ந்த ஒரு சிறுவன், ஏழைகளுக்காக மனமிரங்கி உதவியது மட்டுமன்றி அவர்களைப் போலவே எளிமையாக வாழத் தொடங்கியது மிகவும் அதிசயம் அல்லவா? அப்படியிருந்த ஒரு சிறுவன் ஆல்பர்ட்.

ஜெர்மனி நாட்டில் ஒரு வசதியான குடும்பத்தில் பிறந்திருந்த ஆல்பர்ட் தன்னுடைய ஏழை நண்பன் ஜார்ஜ் என்பவனுடன் ஒருநாள் பள்ளியிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கும் போது, ஜார்ஜ் விளையாட்டாக தன்னுடன் குஸ்திச் சண்டை போட ஆல்பர்ட்டை அழைத்தான். இருவரும் போட்ட விளையாட்டுச் சண்டையில், ஆல்பர்ட் வெற்றி பெற்றான். வெற்றி பெற்ற ஆல்பர்ட்டை நோக்கி, அவன் ஏழை நண்பன் ஜார்ஜ், ''நீ வெற்றி பெற்று விட்டாய். ஆனால் உன்னைப் போல் ஒவ்வொரு இரவும் நல்ல சத்துள்ள உணவு சாப்பிட்டால், என்னாலும் உன்னை வெற்றி கொள்ள இயலும்,'' என்றான்.

தன் நண்பன் சொன்ன வார்த்தைகள் ஆல்பர்ட்டின் மனதில் 'சுருக்' எனத் தைத்தன. அன்றிரவு வீட்டில் அவனது தட்டில் நல்ல சத்துணவு பறிமாறப்பட்ட போது, தன் ஏழை நண்பன் சொன்னது நினைவுக்கு வர, ஆல்பர்ட் அந்த சத்துணவை சாப்பிடாமலே எழுந்துவிட்டான். அதுமட்டுமல்ல, இனி தன் ஏழை நண்பர்கள் சாப்பிடும் எளிய உணவையே தானும் உட்கொள்ள வேண்டுமென்று நிச்சயம் செய்து கொண்டான்.

உணவில் மட்டுமல்லாமல், தன் உடைகளிலும் வியக்கத்தகு மாறுதல்கள் செய்து கொண்டான். விலையுயர்ந்த உடைகளைத் தவிர்த்து, ஏழைகளைப்போல் உடை அணியத் தொடங்கினான். தன் பெற்றோர் எத்தனை வற்புறுத்தியும் கேட்கவில்லை. சமூகத்திலுள்ள மற்ற ஏழைகளைப் போலவே, வசிக்கவும், உடுத்தவும், உண்ணவும் தொடங்கி, ஏழைகளுக்கு உதவி செய்வதையே தன் வாழ்வில் குறிக்கோளாகக் கொண்டான். பெரியவனாகி, இசைத்துறையில் புகழ் பெற்றும், அதையெல்லாம் துறந்து ஏழைகளின் பணியில் முழு நேரமும் செலுத்தினான். அந்தச் சிறுவன் வேறு யாருமில்லை. 1942ம் ஆண்டு சமாதானத்திற்காக நோபல் பரிசு பெற்ற ஆல்பர்ட் ஸ்வேட்ஸ் தான் அவர்.



# கடவுளின் கருணை

**ஆ**ரவல்லி என்ற கிராமத்தில் வசித்து வந்த கோவிந்தன் என்ற வாலிபன் மிக நன்றாகப் பாடக் கூடியவன். அந்த கிராமத்து சிவன் கோயில் திருவிழாக் களின் போது தன் இனிய குரலில் சிவன் மீது பக்திப் பாடல்கள் பாடி கேட்போர் அனைவரையும் பரவசப் படுத்தக் கூடிய ஆற்றல் அவனிட மிருந்தது. அவன் பாடல்களை மெய் மறந்து கேட்கும் கிராமத்தினர், ''எவ்வளவு இனிமையான குரல் இவனுக்கு! எவ்வளவு நன்றாகப் பாடுகிறான்? இவன் மட்டும் ஆஸ் தானப் பாடகராகி விட்டால், இவனால் நமது கிராமத்திற்கே பெருமை உண்டாகும்,'' என்று எண்ணினர்.

ஆனால் கோவிந்தன் மட்டும் வினயத்துடன், ''நான் சிவபெரு மானது அருளினால் நன்றாகப் பாடுகிறேன். ஆனால் ஆஸ்தானப் பாடகராக ஆக வெறும் இனியகுரல் மட்டும் இருந்தால் போதுமா? சங்கீதத்தில் ஆழ்ந்த ஞானமும், பாடுவதில் தீவிர முயற்சியும் வேண் டும். எனக்கு இரண்டுமே கிடை யாது'' என்று மறுத்து விடுவான்.

சிவராத்திரி தினம் நெருங்கிக் கொண்டிருந்தது. அதையொட்டி தினமும் கோயிலில் இசை நிகழ்ச்சி கள் நடந்து கொண்டே இருந்தன. கோவிந்தன் தவறாமல் அவற்றில் பங்கேற்று பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தான். அந்த நாட்களில் அவனுக்கு பூபதி என்ற வாலிபனுடன் தொடர்பு ஏற்பட்டது. பூபதி எல்லோருடனும் நகைச்சுவை உணர்ச்சியுடன் பேசுவான். பொழுது போக்கு நிகழ்ச்சிகளில் பல விதமான வேடங்கள் புனைந்து, விகடம் செய்து விதவிதமாக நடித்து அனைவரையும் சிரிக்க வைப்பான். அந்த பூபதி ஒருநாள் கோவிந்தனின் பாடலைக் கேட்டு விட்டு, ''நீ மிக

நன்றாகப் பாடுகிறாய். எப்படி என் நடிப்பைக் கண்டு பலரும் மகிழ்ச்சி அடைகின்றனரோ, அது போல் உன்னுடைய பாடல்களையும் கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைகின்றனர். ஆனால் இந்த கிராமத்தின் புகழ் பெருக வேண்டுமானால், நீ பல இடங்களுக்குச் சென்று பாடி, உன் திறமையை வெளியுலகுக்குக் காண்பிக்க வேண்டும்'' என்றான்.

அதற்கு கோவிந்தன், ''எனக்கு பக்திப் பாடல்கள் மட்டுமே தெரியும். நான் முறையாக சங்கீதம் பயின்றவன் அல்ல. சிலர் என்னை ஆஸ்தானப் பாடகராக ஏன் ஆகக் கூடாது என்று கேட்கின்றனர். அந்த அளவுக்கு எனக்கு இசையில் ஞானம் போதாது. அதற்கேற்ற பயிற்சியும் எனக்கு இல்லை. ஆஸ்தானப் பாடகர் ஆவது அவ்வளவு ஒன்றும் எளிதில்லை. அப்படி என் புகழ் ஓங்க வேண்டும் என்றால் அது அந்த சிவபெருமான் மனது வைத்தால் மட்டுமே நடக்கும்'' என்றான்.

அதற்கு பூபதி, ''சிங்கம் வெறுமனே தன் வாயைத் திறந்து வைத்துக் கொண்டால் மட்டும் உணவு கிடைத்து விடாது. அதற்கு முயற்சி செய்ய வேண்டும். நீ துர்கா தீர்த்தம் கோயிலைப் பற்றி கேள்விப் பட்டிருப்பாய். அங்கு விரைவிலேயே ஒரு மாதம் திருவிழா நடக்க உள்ளது. நான் அங்கு தான் சென்று கொண்டிருக்கிறேன், நீயும் அங்கே வரலாம். இந்தத் திருவிழாவில் ஜமீன்தாரர் பங்கெடுத்துக் கொள்கிறார். நீ அங்கு வந்தால், உன் பாடல்களை அவர் முன் பாட உனக்கு வாய்ப்பு கிடைக்கும். உன் திறமை அவருக்குத் தெரியும்'' என்றான்.



உடனே கோவிந்தன், ''ஆம் அந்தக் கோயிலைப்பற்றி எனக்குத் தெரியும். இறந்தவர்களது ஆத்மா சாந்தி அடையவும், பேய், பிசாசு, பில்லி, சூனியம் இவற்றால் ஏற்பட்ட பாதிப்புக் களைப் போக்கவும் அங்கு பல பக்தர்கள் செல்வதுண்டு. ஒருமுறை அந்தத் திருவிழாவில் பாட முயற்சித்தேன். ஆனால் வாய்ப்பு கிடைக்கவில்லை. இந்த முறை அங்கு மீண்டும் செல்வேன்,'' என்றான்.

இதற்குள் துர்கா தீர்த்தம் செல்லத் தயாரான பூபதி ஒரு தோல்பையை எடுத்துப் பெட்டிக்குள் வைத்துக் கொள்ள முயற்சிக்கையில், அது என்ன என்று கோவிந்தன் கேட்டான்.



''ஓ இதுவா, இந்தப் பையில் பல மருந்துகள் உள்ளன. அஜீரணம், வாயு, வயிற்று வலி இப்படி பல நோய்களுக்கும் தேவையான மருந்துகளை நான் எப்போதும் என்னுடன் எடுத்துச் செல்வது வழக்கம். எனக்கு இப்படிப்பட்ட வியாதிகள் அடிக்கடி வருவதுண்டு'' என்று கூறி முடித்த பூபதி, ''நண்பா, நான் வருகிறேன். துர்கா தீர்த்தத்துக்கு நீயும் விரைவில் வா. நாம் அங்கு சந்திப்போம்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான். அவன் கிளம்பிய சற்று நேரத்திற்குப் பின் அவனுடைய தோல்பை கோவிந்தன் கண்ணில் பட்டது. ''ஆஹா, கடைசியில் மருந்துகளை மறந்து விட்டுச் சென்று விட்டானே, இந்த பூபதி,'' என்று ஓடிப்போய் பூபதியைத் தேடினான். ஆனால் அதற்குள் வெகுதூரம் சென்றுவிட்டிருந்தான் பூபதி. மறுநாளே கோவிந்தனும் துர்கா தீர்த்தம் கோயிலை அடைந்தான். கோயில் திருவிழாக் கோலம் பூண்டிருந்தது. கோவிலின் ஒரு மூலையில் ஒரே கும்பலும் கூச்சலுமாக இருந்தது. உடன் அங்கு விரைந்து சென்ற கோவிந்தனுக்கு ஜமீன்தாரர் கம்பீரமாக ஒரு நாற்காலியில் அமர்ந்து சிரித்துக் கொண்டிருந்ததும் தென்பட்டது. அப்படி அவர்கள் எதைப் பார்த்து சிரிக்கிறார்கள் என்று அறிய விரும்பிய கோவிந்தனுக்கு குரங்கு வேடமளித்து கூத்தாடிக் கொண்டு இருந்த பூபதி தென்பட்டான். ''ஐயோ, அப்பா, வயிற்றை வலிக்கிறதே! என் மருந்து எங்கே? என் மருந்துப் பையை எங்கே வைத்து விட்டேன்? துர்கா தேவியே, என்னைக் காப்பாற்று,'' என்று குதித்து குதித்துக் கூவிக் கொண்டிருந்தான்.

கோவிந்தனுக்கு எல்லாம் விளங்கி விட்டது. முதலில் சாதாரணமாக குரங்கு வேடத்தில் பூபதி குதித்து ஆடி ஜமீன்தாரரையும், பொதுமக்களையும் மகிழ்ச்சிப் படுத்திக் கொண்டிருந்தான். ஆனால் நடுவில் திடீரென அவனுக்கு வயிற்று வலி வந்து விட்டது. அப்போதுதான் மருந்தினைத் தேடவே ஆரம்பித்திருக்கிறான். இது தெரியாத மற்றவர்கள் அவன் வலியில் துடிப்பதையும் வேடிக்கை என்றே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று ஊகித்த கோவிந்தன் ''பூபதி இதோ உன் மருந்து'' என்றுக் கூவிக் கொண்டே,

அவனது தோல்பையினைக் கொடுத் தான். அப்போதுதான் பூபதி செய்வது வேடிக்கையில்லை என்றும் அவன் நிஜமாகவே வலியில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான் என்றும் எல்லோருக்கும் புரிந்தது. தனக்குத் தேவையான மருந்தை பூபதி அருந்திவிட்டு தரையில் அமர்ந்து இளைப்பாறலானான்.

சற்று நேரம் இளைப்பாறிய பிறகு, பூபதி ஜமீன்தாரரிடம் சென்று, ''கோவிந்தனை அறிமுகப்படுத்தி விட்டு, ''ஐயா, இவர் என் கிராமத்தைச் சேர்ந்தவர். இனிய குரலில் எங்கள் கிராமத்து சிவன் கோயிலில் இவர் பாடும் பக்திப் பாடல்களைக் கேட்டு கல்லும் கரைந்துவிடும். அப்படிப்பட்ட எனது நண்பர் கோவிந்தனை தங்கள் முன்னே பாட அனுமதிக்க வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டான்.

ஜமீன்தாரரது அனுமதியின் பேரில் கோவிந்தனுக்கு துர்கை அம்மன் கோயிலில் அன்று பாடும் வாய்ப்பு கிடைத்தது. கோவிந்தனுடைய பக்திப்பாடல்களைக் கேட்டு ஜமீன்தாரரும் பொது மக்களும் உருகி விட்டனர். அதுமட்டுமல்ல, ஜமீன்தாரர் கோவிந்தனை உடனடியாக ஆஸ்தானப் பாடகராக நியமிப்பதாக அறிவித்து விட்டார். பூபதிக்கும் ஏராளமாகப் பணம் கொடுத்து உதவினார்.

கோவிந்தன் மிகுந்த நன்றியுடன் பூபதியின் கைகளைப் பற்றிக் கொண்டு, ''பூபதி, நீ இன்று செய்த உதவியை, நான் என்றும் மறவேன்'' என்று உணர்ச்சி பொங்கக் கூறினான். உடனே பூபதி, ''நண்பா, நீ எனக்கு தக்க சமயத்தில் மருந்தினை எடுத்து வந்து எத்தகைய உதவி செய்துள்ளாய்? அதற்குமுன், நான் செய்தது சாதாரணமான உதவி. நீ பரிபூரண நம்பிக்கை வைத்துள்ள சிவபெருமான்தான் உன்மீது பெருங்கருணை பூண்டு தக்க சமயத்தில் உனக்கு கை கொடுத்துள்ளார். ஆகவே அவருக்கு நன்றி சொல்வாய்'' என்று பதில் அளித்தான்.

சிவபெருமானின் கருணையை எண்ணி கோவிந்தன் மெய் சிலிர்த்தான்.



# இனிய சொல்லிருக்க...

கங்காதரன் என்னும் கறிகாய் வியாபாரியிடம் சத்யராஜன் என்ற வாலிபன் வேலைக்கமர்ந்தான். தனது நேர்மையினாலும், நாணயத்தினாலும் விரைவிலேயே அவன் தன் முதலாளியின் நன்மதிப்புக்குள்ளானான். ஆனால் அவனிடமிருந்த ஒரேயொரு குறை அவனது முன்கோபம் தான். வாடிக்கையாளர்கள் யாராவது சற்று நீண்ட நேரம் வியாபாரத்தில் பேரம் செய்தால், சத்யராஜன் பொறுமையிழந்து அவர்களிடம் தன் கோபத்தை காண்பிப்பது வழக்கமாயிருந்தது.

கங்காதரன் அவனுக்குப் பலமுறை பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தியும், சத்யராஜனால் தன் வழக்கத்தை மாற்றிக் கொள்ள முடியவில்லை. ஒரு நாள் அந்த ஊரிலிருந்த வீரபத்திரன் என்ற பணக்காரர் தன் வேலைக்காரியை கறிகாய் வாங்க கங்காதரன் கடைக்கு அனுப்பியிருந்தார். அவளுடன் ஏதோ வாக்குவாதம் உண்டாக சத்யராஜன் வழக்கப்படி அவளிடம் சுடு சொற்களைப் பேசி அனுப்பி விட்டான். அவள் சென்று வீரபத்திரனிடம் முறையிட, அவர் சத்யராஜனின் செயலைப் பற்றி கங்காதரனிடம் புகார் செய்து விட்டார். கோபமடைந்த கங்காதரனும் சத்யராஜனை வேலையை விட்டு நீக்கி விட்டார்.

வேலையை இழந்து இரண்டு நாள் தவித்த பிறகு, சத்யராஜன் மீண்டும் கங்காதரனை அணுகினான். அவனைக் கண்டவுடன் கங்காதரன் உரத்தக் குரலில், ''இங்கிருந்து போய்விடு. நீ தேவையில்லை,'' என்று கடிந்து கொள்ள சத்யராஜின் கண்கள் கலங்க ஆரம்பித்துவிட்டன. அவன் அங்கிருந்து கிளம்ப ஆரம்பித்ததும் கங்காதரன், ''சத்யராஜ், இங்கே வா'' என்று அழைத்தார். இப்போது கங்காதரன் குரலில் கோபம் இல்லை. கனிவுடன் சத்யராஜனை நோக்கி, ''சுடு சொற்களால் மனது எப்படி புண்படும் என்று இப்போது உனக்குப் புரிந்ததா? இனிமேலாவது வாடிக்கையாளர்கள் மனம் புண்படாமல் ஒழுங்காக நடந்து கொள்வாயா?'' என்று கேட்க, ''முதலாளி, இப்போது நன்றாகப் புரிந்து கொண்டேன். என்னை மன்னித்து விடுங்கள்,'' என்று கெஞ்சினான் சத்யராஜன். ''சரி, சரி வேலையில் மீண்டு சேர்ந்து கொள்'' என்றார் அவன் முதலாளி.





# மிவெி மிபதீ ரிவிஷீ

## 7

*(காட்டில் கொள்ளைக்காரர்கள் தலைவனான நாகமல்லன் துன்முகனைப் பிடித்துக் கொள்ள, துன்முகன் தன் பெயரை துர்ஜயன் என்று வேண்டுமென்றே மாற்றிச் சொன்னான். அதை நம்பாத நாகமல்லன் துன்முகனை ஒரு குகையில் அடைத்தான். அப்போது துன்முகனைத் துரத்திக் கொண்டு வந்த மாயக்கரடி குகைக்குள்ளே நுழைந்து விட்டது. அந்த சமயம் அங்கு புதியதாக உக்கிரதண்டன் என்னும் அரக்கன் வர, மாயக்கரடி அந்த அரக்கனைத் தாக்க முயன்றது. பிறகு...)*

**மா**யக்கரடியைக் கண்ட உக்கிர தண்டன் ஒரு கணம் திகைத்து நின் றான். திடீரென அவனது கை கால்கள் நடுங்க ஆரம்பித்தன. பிறகு தன்னை சமாளித்துக் கொண்ட உக்கிரதண்டன், ''அடேய் மனிதக்கரடியே! உனக்கு என்ன தைரியம்? நான் யார் தெரியுமா?'' என்று கத்தினான்.

''வாயை மூடு உக்கிரதண்டா! சும்மா ஏன் கத்துகிறாய்? என்னைப் பார்த்து பயத்தில் நீ நடுங்குவதைத் தான் நான் பார்க்கிறேனே!'' என்றது கரடி.

உக்கிரதண்டன் பற்களைக் கடித்த வாறு, கால்களை பூமியில் அழுந்த வைத்துக் கொண்டு, ''நான் உன்னைப் பார்த்து பயப்படுகிறேன் என்று எண்ணிக் கொள்ளாதே. எனக்கு உன்னைப் பார்த்தால் வெருப்பாக இருக்கிறது. கோபத்தினால் என்



உடல் நடுங்குகிறது. உன்னுடைய இந்த விகாரமான உருவம் எப்படி இருக்கிறது தெரியுமா? பாதி மனிதனாகவும் மீதி மிருகமாகவும் ச்சே!'' என்றான்.

''அடேய் முட்டாள்! மாய மந்திர வாதியினால் உருவாக்கப்பட்ட இந்த மாயக்கரடியைப் பற்றி உனக்குத் தெரியாது? நீ என்னை அவமானமா செய்ய நினைக்கிறாய்? உன் தலையை சீவுகிறேன் பார்!'' என்று கோடாலியு டன் கரடி உக்கிரதண்டனை நெருங்கி யது. அந்த மாயக்கரடி தன்னை நோக்கிப் பாய்ந்து வருவதைக் கண்ட அரக்கன் ஓடிப்போய் ஒரு மரத்தின் அருகில் நின்று கொண்டான். பிறகு கரடியை நோக்கி, ''மாயக்கரடியே! சற்று நில். நாம் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு காயமடைவதால் என்ன பயன்? இதனால் யாருக்கு லாபம் என்று யோசித்தாயா?'' என்று சமாதானமான குரலில் கேட்டான். உக்கிரதண்டனின் வார்த்தைகளைக் கேட்டதும் கரடி சற்று யோசிக்கத் தொடங்கியது.

மந்திரவாதியின் உத்திரவுப்படி நான் துன்முகனைத் தேடிக் கொல்ல வந்துள்ளேன். எனது கடமை முடிந்தவுடன் மீண்டும் மந்திரவாதி யிடம் செல்ல வேண்டும் அல்லவா? இப்போது ஏன் வீணாக இந்த அரக்கனுடன் சண்டை இட வேண்டும்? இவ்வாறு யோசித்த கரடி, தன் கோடாலியைத் தணித்து விட்டு, ''உக்கிரதண்டா! சரியான சமயத்தில் என் கடமையை நினைவூட்டினாய். நீ செல்லலாம். நான் இங்கு குகையில் ஒளிந்துள்ள துன்முகனின் தலையை வெட்டிய பிறகு என் வழியில் செல்வேன்,'' என்றது.

உக்கிரதண்டன் சற்று ஆச்சரியத் துடன், ''மாயக்கரடியே! சற்றுமுன் மாய மந்திரவாதியைப் பற்றி குறிப் பிட்டாய் அல்லவா! அவரை எனக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். அதிருக்கட்டும், உன் மந்திரவாதியின் வயதென்ன?'' என்று கேட்டான்.

இதைக் கேட்டதும் மாயக்கரடி பலமாக சிரிக்க ஆரம்பித்தது. பிறகு அரக்கனை நோக்கி, ''சூரிய சந்திர னுக்கு எவ்வளவு வயதோ, அவ்வளவு இருக்கும். அவர் கண்கள் முன்னால் தான் இமயமலை தோன்றி இவ்வளவு உயரம் வளர்ந்தது, பிரம்மபுத்திர நதியின் ஆரம்பத்தையும் கூட இவர் கண்டுஇருக்கிறார் என்றார் பார்த்துக் கொள்ளுங்கள் என்ன இப்போ புரிந்ததா?'' என்றது. ''சபாஷ் மாயக்

கரடியே,'' என்று கரடியைப் பாராட்டிய உக்கிரதண்டன், ''உன்னுடைய கோடாலியைப் போலவே, உன் நாக்கும் கூர்மையாக உள்ளது. உன்னைக் கண்டு எனக்கு மிக்க மகிழ்ச்சி. உன்னுடன் வந்து உன் எஜமானரை நானும் சந்திக்கலாம் என்று நினைக்கிறேன். சரியா?'' என்று கேட்டுக் கொண்டு, தன் கையில் இதுவரைப் பிடித்திருந்த கல்லினால்ஆன கதையை கீழே போட்டான்.

அரக்கனின் இந்த செயலைக் கண்டு, ''ஆமாம், நீ ஏன் உன் ஆயுதத்தை எறிந்து விட்டாய்? இதன் பின் ஏதேனும் இரகசியம் இருக்கிறதா?'' என்று கரடி கேட்க ''நாம் இருவரும் இந்தக் கணத்தில்இருந்து நண்பர்கள் ஆவோம்'' என்றான் அரக்கன்.

இதைக்கேட்டு பலமாக சிரித்த கரடி, ''மந்திரவாதியின் மந்திர சக்தியால் என் பழைய உருவம் போய் விட்டது. நான் எப்பொழுது மன்னன் துன்முகனின் தலையை வெட்டி மந்திரவாதியிடம் ஒப்படைக்கிறேனோ அப்பொழுதே என் உருவத்தை அவர் மீண்டும் மாற்றி விடுவார். அப்படியிருக்கையில் நம் இருவரினிடையில் நட்பு சாத்தியமில்லாதது. நீ உன் இருப்பிடத்திற்குச் செல்லலாம்'' என்றது.

பிறகு மாயக்கரடி துன்முகன் ஒளிந்திருந்த குகையின் வாயிலை மூடியிருந்த பாறையை நகர்த்த முயற்சித்தது. மறுபடியும் மாயக்கரடி குகைக்குள் நுழைய முயல்வதைப்



பார்த்த மெய்க்காப்பாளன், ''நாக மல்லா, நம்முடைய முடிவு நெருங்கி விட்டது. மன்னனுடன் நம் எல்லோரையும் சேர்த்தே கரடி கொன்று விடப் போகிறது. இப்போது என்ன செய்யலாம்?'' என்று நடுங்கியவாறு கேட்டான்.

கேள்விக்குறியான பார்வையை துன்முகன் மேல் செலுத்திய நாக மல்லன், ''துன்முகா! உன்னுடைய மெய்க்காப்பாளன் வார்த்தைகளிலிருந்து நீ துர்ஜயன் அல்ல, நீதான் மன்னன் துன்முகன் என்பது தெளிவாகிவிட்டது. அந்தக் கரடி உன்னைத் தான் குறி வைத்துள்ளது. இந்த நிலையில் உன்னைக் காப்பற்றிக் கொள்ள முயற்சி செய்யாமல், என்ன யோசிக்கிறாய்?'' என்று கேட்டான். ''அடுத்து என்ன செய்வது என்பதைப் பற்றித்தான் நானும் சிந்தனை செய்து கொண்டிருக்கிறேன். ஏதாவது யோச



னை உண்டாக தெய்வத்தை வேண்டு கிறேன்,'' என்றான் துன்முகன்.

''சரி,சரி உன் நேரம் நெருங்கி விட்டது.'' என்று கூறிக் கொண்டே நாகமல்லன் துன்முகனை குண்டுக் கட்டாகத் தூக்கிக் கொண்டு குகையின் மூடியிருந்த வாயிலின் அருகில் சென்று, ''மாயக்கரடியே! தன் பெயர் துர்ஜயன் என்று பொய் சொல்லிக் கொண்டு உள்ளே இருக்கும் இந்த துன்முகனைத்தானே நீ தேடுகிறாய்?'' என்று கேட்டான்.

''ஆம், அவன் தான் எனக்குத் தேவை. மற்றவர்கள் எனக்குத் தேவை யில்லை. அவனை குகையிலிருந்து வெளியே தள்ளி விடு, நான் அவனு டைய தலையைத் தான் வெட்டி எடுத்துச் செல்வேன்,'' என்றது கரடி.

பயத்தின் எல்லைக்கே சென்று விட்ட துன்முகன் இறுதியாக ஒரு யோசனை தோன்ற தன் மெய்க் காப்பாளனை நோக்கி, ''அடேய், உன் எஜமான பக்தியைக் காட்ட உனக்கு இப்போது வாய்ப்பு உள்ளது. நீ முன் வந்து அந்தக் கரடியின் முன் நில். நான் அதற்குள் தப்பிக்க முடியுமா என்று முயற்சிக்கிறேன்,'' என்றான்.

இதற்குள் கரடி பொறுமைஇழந்து, ''துன்முகனை நீங்கள் வெளியே தள்ளவில்லையானால், நான் குகைக் குள் நுழைந்து உங்கள் அனைவரின் தலைகளயும் வெட்டி விடுவேன்,'' என்று கத்தியது.

நாகமல்லன் துன்முகனை விட்டு விட்டு தன் இரு ஆட்களுடன் சென்று குகை வாயிலில் இருந்த பாறையை சிறு இடைவெளி விட்டு நகர்த்திக் கொண்டு பணிவுடன் அந்த மாயக் கரடியை நோக்கி, ''என்னையும், என்னுடைய இரு ஆட்களையும் உயிருடன் விட்டு விடுங்கள். நாங்கள் ஒரு பாவமும் அறியாதவர்கள் அதுவுமில்லாமல் இந்த பயங்கரமான காட்டில் வனவிலங்குகளின் நடுவில் உயிரைப் பிடித்துக் கொண்டு வாழும் அப்பாவி நாங்கள்'' என்று கை கூப்பினான்.

''அடே நிறுத்து உன் புலம்பலை! நீங்கள் கொள்ளைக்காரர்கள் என்று தெரியும். இருந்தாலும் உங்களை விட்டு விடப் போகிறேன். நீங்கள் போகலாம்,'' என்றது கரடி. உடனே நாகமல்லனும் அவனது இரு ஆட்களும் குகையிலிருந்து வெளியே வந்து விட்டனர். அவர்களுடன் ஒளிந்து பதுங்கிக் கொண்டே வெளி

யே வந்த துன்முகன் விரைந்து ஓடத் தொடங்கினான். இதைக் கண்ட கரடி, ''அடேய் நில்'' என்று துன்முகனை துரத்த, பயந்து அலறிக் கொண்டே ஓடிய துன்முகன் உக்கிர தண்டனின் காலடியில் போய் விழுந்தான்.

துன்முகனைத் தாக்கச் சென்ற கரடியை கையமர்த்தி நிறுத்திய அரக்கன், ''பொறு, கரடியாரே! உன்னை மந்திரவாதி துன்முகனை உயிரோடிருக்கையில் தலையை அரியச் சொன்னானா இல்லை இறந்த பிறகா?'' என்று கேட்டான். ஒருகணம் திகைத்த கரடி ''என்ன சொல்கிறாய்? துன்முகன் இறந்து விட்டானா?'' என்று கேட்டது.

''இல்லை, மயக்கமடைந்து விட்டான். இவனை இப்படியே தூக்கிச் சென்று மந்திரவாதியின் முன்னிலையில் இவனைக் கொல். அதற்குள் இவன் மயக்கமும் தெளிந்து விடும்'' என்றான் உக்கிரதண்டன். அந்த சமயம் தப்பித்து ஓட முயன்ற நாகமல்லனையும் அவன் ஆட்களையும் பார்த்ததும் ''அடே கொள்ளைக் காரர்களா? எங்கு தப்பியோட முயற்சிக்கிறீர்கள்? இங்கே வாருங் கள். மீறி ஓடினால், உங்களைக் கொன்று விடுவேன்'' என்று அதட்டிய உக்கிரதண்டன் ''அந்த மெய்க்காப்பாளன் எங்கே?'' என்றான்.

இதைக் கேட்டதும் மூன்று திருடர்களும் பயத்தில் நடுங்க ஆரம்பித்தனர். நாகமல்லன் குகைக் குள் எட்டிப் பார்த்துவிட்டு ''ஐயா,



அவரும் மயக்கமடைந்து குகையின் உள்ளே விழுந்து கிடக்கிறார்'' என்றான் நாகமல்லன். ''மயக்க மானது போல் நடிக்கிறான்'' என்ற உக்கிரதண்டன் குகையின் உட் புறத்தை நோக்கி, ''மெய்க்காப்பாளா! குகையை விட்டு வெளியேவா. உனக்கு இந்த உக்கிரதண்டன் மாயக்கரடியிடம்இருந்து பாதுகாப்பு அளிப்பான்,'' என்று உரத்த குரலில் கூற ஏதோ மந்திரம் போட்டவன் போல் துள்ளியெழுந்த மெய்க்காப் பாளன் குகையிலிருந்து வெளியே வந்து, ''என்ன நடந்தது? மன்னர் எங்கே?'' என்று நடுங்கியவாறு கேட்டான். ''அதோபார், உங்கள் மன்னன் உக்கிரதண்டனின் காலடி யில் மயக்கமாக விழுந்திருக்கிறான்,'' என்றான் நாகமல்லன். பயத்தினால் முகம் வெளுத்த மெய்க்காப்பாளன் உக்கிரதண்டனை நோக்கி, ''ஐயா,

உங்களின் மெய்க்காப்பாளனாக ஆகிவிடுகிறேன். என்னை இந்தக் கரடியிடமிருந்து காப்பாற்றுங்கள்,'' என்று கெஞ்ச ஆரம்பித்தான். ''அடக் கடவுளே! என்னுடைய பாதுகாப்புக் காக ஒரு மனிதன் கிளம்பி வந்துள் ளான். ஆனால் அவனுக்கு முதலில் தன்னையேக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியவில்லை. இவன் எனக்கு மெய்க்காப்பாளனாக இருப்பானாம். எப்படியிருக்கிறது!'' என்று கிண்டல் செய்த உக்கிரதண்டன். ''நீ சென்று அங்குள்ள குளத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்துவா. அதைக் கொண்டு உன் மன்னனின் மயக்கத்தைத் தெளிய வைப்போம்'' என்று மெய்க்காப்பா ளனுக்குக் கட்டளையிட்டான்.

ஆனால் மெய்க்காப்பாளனோ, ''ஆஹா! என் மன்னனின் மயக்கம் தெளிந்தவுடன், இந்த மாயக்கரடி கொன்று விடுமே!'' என்று சொல்லிக் கொண்டே தயங்கினான். ''முட்டாள், உக்கிரதண்டன் கூறியது உன் காதில் விழவில்லையா?'' என்று கரடி அதட்டியது.

உடனே மெய்க்காப்பாளன் குளத்தை நோக்கி விரைந்தான். ஒரு பாத்திரத்தில் தண்ணீர் மொண்டு கொண்டிருக்கையில், திடீரென துதிக்கையறுந்த யானை அவனை நோக்கி ஓடி வருவதைக் கண்டான். அதைக் கண்டவுடன் பாத்திரத்தை குளத்திலேயே விட்டுவிட்டு, தப்பித் தோம் பிழைத்தோம் என்று மெய்க் காப்பாளன் தலைதெறிக்க ஓடி உக்கிர தண்டனை அடைந்தான். ''ஐயா, ஆபத்து! கரடியார் எந்த யானையின் தும்பிக்கையைத் துண்டித்தாரோ, அந்த யானை என்னைத் துரத்துகிறது. என்னைக் காப்பாற்றுங்கள்,'' என்று அலறினான்.

''அட, அப்படியா? என் வாகனம் காணவில்லையே என்று நினைத் தேன். அது வந்து கொண்டிருக்கிறதா! வரட்டும், வரட்டும்'' என்று கூறிய கரடி திரும்பிப் பார்க்க, தும்பிக்கை அறுந்த யானை பயங்கரமாகப் பிளிறிக் கொண்டே தங்களை நோக்கி ஓடி வரக் கண்டது.

(தொடரும்)





நவீன
வேதாளக்
கதை

# சுயநலத்திலும் பரோபகாரம்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே ''மன்னா, இந்த பயங்கரமான சூழ்நிலையிலும் மனம் தளராமல் உன் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாய். ஆனால் நீ இவ்வளவு முயற்சிகள் எடுத்தும் எதிர்பார்த்த பலன் ஏன் கிடைக்கவில்லை என்று யோசித்துப் பார்த்தாயா? உன்னுடைய முயற்சிகளைப் பாராட்டினாலும் உன்னுடைய கண்



மூடித்தனமான முயற்சிகளைக் கண்டு உன் மீது பரிதாபம் தான் உண்டாகிறது. சிலசமயம் நீ இவ்வளவு பாடுபடுவது பரோபகார சிந்தையினாலா அல்லது உனது சுய நலத்திற்காகவா என்று எனக்கு சந்தேகம் ஏற்படுகிறது. சில சமயங்களில் சுயநலத்திற்கும் பரோபகாரத்திற்கும் உள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்வது கூட கடினம். இதை விளக்க உனக்கு ஒரு கதை சொல்கிறேன் கேள்'' என்றது.

கோண்டுபுரம் என்ற கிராமத்தில் புருஷோத்தமன் என்ற மனிதருக்கு சேகர், கமல் என்ற இரு பிள்ளைகள் இருந்தனர். சேகர் மற்றவர்களுக்கு உதவும் தன்மை உள்ளவன். ஆனால் கமல் ஒரு சுயநலவாதி. எப்போதும் முதலில் தன்னைப் பற்றியே நினைப்பவன். தனது இளைய மகனின் போக்கினை மாற்ற, புருஷோத்தமன் அவனிடம் ''கமல்! நீ வாழ்க்கையில் சுகமாக வாழ வேண்டும் என்று விருப்பப்பட்டால் காட்டிலுள்ள மலைக்குகையில் வசிக்கும் ஆனந்தர் என்ற ஒரு சன்னியாசியை சந்திப்பாய். இதனால் உனக்கு நன்மை உண்டாகும்'' என்றார். இதைச் சொல்லி முடித்ததும், அவர் உயிர் பிரிந்தது.

தன்னை ஒரு சன்னியாசியிடம் அனுப்பிவிட்டு, தனது சொத்து முழுதும் சேகருக்குக் கொடுக்க எண்ணுகிறாரோ என்று கூட அவனுக்கு சந்தேகம் உண்டாயிற்று. ஆனால் பின்னர்தான் தன் தந்தையிடம் நல்ல குணங்களைத் தவிர வேறு எந்த சொத்தும் இல்லை எனத் தெரிந்தது.

சேகர் தன் தம்பியிடம், ''நீ என்னுடன் சேர்ந்து இருந்துவிடு. உன்னை நன்றாக கவனித்துக் கொள்கிறேன்'' என்றான். சரிதான், அண்ணன் தான் தன் கூடவே இருக்கச் சொல்லிவிட்டாரே, இனி நமக்கு கவலை இல்லை என்று கமல் அண்ணனின் அரவணைப்பில் நிம்மதியாக உண்டு உறங்கிக் காலம் கழிக்கலானான். இதைக் கண்ட கிராமத்து மக்கள் கமலின் பொறுப்பற்ற செயலை இகழ்ந்து பேசலாயினர். இதனால் கமலுக்கு கோபம் உண்டாயிற்று.

கமல் சேகரிடம், ''நீ சொன்னதால் தான், நான் உன்னுடன் தங்கி உள்ளேன். ஆனால் மற்றவர்கள் என்னைப் பற்றிக் கேவலமாகப்

பேசுகின்றனர் பார்த்தாயா?'' என்றான். சேகர் ''தம்பி! நீ பிறருக்கு உபகாரமாக நடந்து கொண்டால் யாரும் உன்னை அவ்வாறு கேவலமாகப் பேசமாட்டார்கள். மற்றவர்கள் உன்னை விரும்ப வேண்டுமெனில் நீ அவர்களுக்கு உன்னால் முடிந்த உதவி செய்'' என்றான்.

''ஆமாம் மற்றவர்களுக்கு உதவி செய்து உனக்கும் அப்பாவுக்கும் பெரிதாக என்ன கிடைத்தது? எனக்கு நிறையப் பணம் சம்பாதிக்க ஆசை. அதற்கு ஏதாவது வழி தெரிந்தால் சொல்'' என்றான்.

''பணம் சம்பாதிக்க வேண்டுமெனில், வியாபாரத்தில் இறங்க வேண்டும். இல்லையேல், ஏதாவது ஒரு துறையில் திறமை இருக்க வேண்டும். ஆகவே உனக்கு எது சரி என்று தோன்றுகிறதோ, அவ்வாறு செய்'' என்றான் சேகர்.

யோசித்துப் பார்த்து இறுதியில் தன் தந்தை சொன்ன அந்த சன்னியாசியைப் போய்ப் பார்க்க முடிவு செய்தான் கமல். அவ்வாறு அந்த மலைக்குகையைச் சென்று அடைந்த போது தாடியும் மீசையுமாயிருந்த சன்னியாசியைப் பார்த்தான். அவரை வணங்கி விட்டு ''சுவாமி என் தந்தை புருஷோத்தமன், அவர் இறக்கும் தருவாயில் உங்களை சந்திக்குமாறு சொன்னார். எனக்கு விரைவில் பணம் சம்பாதிக்க ஏதாவது வழி சொல்லிக் கொடுங்கள்'' என்றான். அந்த சன்னியாசி அவனை உற்று நோக்கிவிட்டு, ''என்னால் உனக்கு உதவி செய்ய



முடியும். ஆனால் நீயும் நானும் சில இன்னல்களை அனுபவிக்க வேண்டி வரும். அதை விளக்குகிறேன்'' என்றார். தொடர்ந்து அவர் தன்னைப் பற்றிய முழு விவரமும் கமலுக்கு அளித்தார்.

தன் பெயர் ஆனந்தன் என்றும், புருஷோத்தமனும் தானும் நண்பர்கள் என்றும் தெரிவித்தார். பிறருக்கு உதவி செய்வதை தனது லட்சியமாகக் கொண்டிருந்தார் புருஷோத்தமன். ஆனால் ஆனந்தன் சுயநலவாதியாக இருந்தார். ஒருமுறை அவர்கள் இருவரும் சேர்ந்து ஓரிடத்திற்கு சென்று கொண்டிருந்தபோது பாதையில் ஒரு சன்னியாசி கீழே விழுந்து கிடக்கக் கண்டனர். அவரது காலில் பாம்பு கடித்ததற்கு அடையாளமாக சிறு காயம் இருந்தது. புருஷோத்தமன்



அவரது காயத்திற்குப் பச்சிலைச் சாறு பிழிந்து கட்டுப் போட்டு முதலுதவி செய்தவுடன் அந்த சன்னியாசி எழுந்து அமர்ந்து புருஷோத்தமனை நோக்கி ''எனக்கு உதவி செய்ததற்கு மிக்க நன்றி. இதற்குப் பிரதியாக என்னிடம் உள்ள ஒரு சக்திவாய்ந்த தாயத்தை உனக்குத் தருகிறேன். அதை வைத்துக் கொண்டால் நீ நினைத்த தெல்லாம் நடக்கும். செல்வம் உன்னைத் தேடி வந்தடையும்'' என்றார்.

புருஷோத்தமன் அடக்கத்துடன், ''சுவாமி, செல்வத்தினால் நன்மை களை விட தீமைகளே அதிகம். நீங்கள் தாயத்தை வேறு யாருக்காவது கொடுங்கள்'' என்றார். அதற்கு அந்த சன்னியாசி ''தம்பி! இந்த தாயத்து உனக்குத்தான் அளிப்பேன். ஆனால் இது வேண்டாம் என்றால் நீயே யாராவது நல்ல மனிதனுக்கு இதைக் கொடுத்துவிடு. கெட்டவர்களுக்குக் கொடுத்தால் விபரீதம் விளையும்,'' என்றார். இத்தனை நேரம் நடக்கும் சம்பவங்களை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த ஆனந்தனுக்கு அந்த தாயத்தை தான் அடைய வேண்டு மென்று ஆசை உண்டாயிற்று. அவர் சன்னியாசியிடம் ''விபரீதம் என்றீர் களே, அது என்ன?'' என்று கேட்க, சன்னியாசி ''முதலில் இதை நீண்ட நாட்கள் தன்னிடம் வைத்துக் கொள்ளக் கூடாது. தவிர இதை சுயநலத்திற்காக மட்டுமே பயன் படுத்துபவன், தான் விரும்பிய பொருட்களை எல்லாம் முதலில் பெற்றாலும் நாளடைவில் மனதில் உற்சாகம் இழந்து விரக்தி அடைந்து விடுவான். வாழ்க்கையைத் துறந்து ஒரு சன்னியாசி ஆகி விடுவான். ஆனால் மோட்சமும் கிடைக்காது. அதை வேறு யாருக்காவது கொடுத்து விட்டாலும் அது மீண்டும் அவனை யே வந்து அடையும். இதை முதன் முதலில் அவனுக்குத் தந்தவர் களுக்கும் மோட்சம் கிடைக்காது'' என்றார்.

ஆனால் ஆனந்தனின் மனதைப் புரிந்து கொண்ட புருஷோத்தமன் ''நண்பா, நீ இதை விரும்புகிறாய் எனத் தோன்றுகிறது. இந்த தாயத்தை நீயே எடுத்துக் கொள்'' என்று கூறி ஆனந்தனுக்கேக் கொடுத்து விட்டார். அவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் அதைப் பெற்றுக் கொண்டார். ஆனந்தன் தான் விரும்பிய பொருட்க ளெல்லாம் தாயத்தின் உதவியால் பெற்றுக் கொண்டார். ஆனால்



அதையெல்லாம் தனக்காகவே சுயநலத்துடன் பயன்படுத்திக் கொண்டார். ஓர் ஆண்டுக்குள் தான் விரும்பியதெல்லாம் பெற்றபின் ஆனந்தன் அந்த தாயத்தை வேறு யாருக்கோ அளித்துவிட்டார். ஆனால் அவருக்கு வாழ்க்கையில் உற்சாகம் சிறிது சிறிதாகக் குன்றியது. அந்த தாயத்து மீண்டும் மீண்டும் அவரிடம் திரும்பி வந்தது. ஆனால் அவருக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு சன்னியாசி ஆகிவிட்டார்.

அவரது நண்பர் புருஷோத்தமன் ஆனந்தன் நிலை கண்டு வருந்தினார். ''இந்த தாயத்தை உனக்கு அளித்து உன் வாழ்க்கையை கெடுத்ததே நான்தான்! இதற்குப் பரிகாரமாக, உன்னிடமிருந்து கூடிய சீக்கிரம் தாயத்தை நான் வாங்கிக் கொள்கிறேன்'' என்றவர் திடீரென இறந்து விட்டார்.

மேற்கண்ட சம்பவங்களைக் கூறி முடித்த ஆனந்தர், ''கமல் எனக்கும் இறந்து போன உன் தந்தைக்கும் மோட்சம் கிடைக்காது. இதை நீ பெற்றுக் கொண்டு, வேண்டியவற்றைப் பெறுவாய். ஆனால் என்னைப் போல் சுயநலக்காரனாக இருந்தால், என்னைப்போல துன்பம் அனுபவிப்பாய்'' என்று கூறி அந்த தாயத்தினை கமலுக்குக் கொடுத்தார். ''என் தந்தையின் நண்பரே மிக்க நன்றி'' என்று கூறி தாயத்தினைப் பெற்றுக் கொண்ட கமல், ''இதைப் பெற்றுக் கொள்வதன் மூலம், என் தந்தைக்கும் உங்களுக்கும் மோட்சம் கிடைக்குமெனில் அதைவிட மகிழ்ச்சியான விஷயம் எதுவுமில்லை. நான் சுயநலக்காரன்தான். அது தெரிந்துதான் என் தந்தை என்னை உங்களிடம் இந்த தாயத்தைப் பெற்றுக்கொள்ள அனுப்பினார். நான் இந்த தாயத்தினை வைத்துக் கொள்வதால் எனக்கு நன்மைகளும் ஏற்படலாம் தீமைகளும் ஏற்படலாம். ஆயினும் என்னுடைய சுயநலமும் தங்களுக்காகப் பயன்படும் எனில் அது ஒரு விதத்தில் பரோபகாரமே ஆகிறது வருகிறேன்,'' என்று கூறி தாயத்துடன் சென்றான்.

தாயத்து கமலிடம் வந்ததிலிருந்து, அவன் விரும்பிய பொருட்கள் எல்லாம் கிடைக்கத் தொடங்கின. ஆனால் ஆனந்தருடைய வார்த்தைகளைக் கேட்டதிலிருந்து கமலின் மனம் சற்று மாறத் தொடங்கியது. தாயத்தின் மகிமையினால் தனக்குக் கிடைத்தப் பொருட்களை மற்றவர்களுக்கும் வழங்கத் தொடங்கினான்.

இவ்வாறாக முழு சுயநலவாதியாக இருந்த கமலின் குணம் கொஞ்சம் கொஞ்சமாக மாறத் தொடங்கியது. இவ்வாறு ஓர் ஆண்டு கழிந்தது.

கமல் வசதியுடன்தானும் வாழ்ந்து, பிறரையும் வாழவைத்துக் கொண்டிருக்கையில், ஒருநாள் சன்னியாசி ஆனந்தன் அவனைத் தேடி வந்தார். அவனிடம் தாயத்தினைக் கேட்டார். கமலும் உடனே அந்த தாயத்தினை அவரிடம் கொடுத்து விட்டான். ''கமல் உன் தந்தைக்கு மோட்சம் கிடைத்து விட்டது. எனக்கும் உன்னுடைய பரோபகாரச் செயல்களால் மோட்சம் கிடைத்துவிடும். இனி உனக்கு இந்த தாயத்து தேவையில்லை. ஏனெனில் நீ இதை அதிக நாள் வைத்திருக்கக் கூடாது'' என்று சொல்லிவிட்டு, அந்த தாயத்தைக் கண்காணாமல் எங்கோ தூக்கி எறிந்து விட்டார்.

இக்கதையைக் கூறி முடித்த பின் வேதாளம், ''விக்கிரமா? ஒரு விதத்தில் கமலுடைய சுயநலம் பரோபகாரத்துக்கு உதவியது. அப்படியானால் சுயநலமும் ஒரு விதத்தில் நன்மை தருவதுதானா? எந்த தாயத்து ஆனந்தனை வாழ்க்கையில் விரக்தி அடையச் செய்ததோ, அதே தாயத்து கமலுக்கு எந்த தீமையும் விளைவிக்கவில்லை. இது ஏன்? இந்தக் கேள்விகளுக்கு பதில் தெரிந்தும், நீ மவுனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன் ''சுயநலம் நல்லதல்ல. ஆனால் சுயநலமாக இருந்தும் பிறருக்கு தீங்கு விளைவிக்காமல், பலரும் பயன் அடையும்படி இருந்தால், தவறு இல்லை. கமல் சுயநலவாதிதான் ஆனால் கமலுடைய தந்தையின் இயல்பான பரோபகார குணம் கமலுக்கும் சிறிதளவு இருந்தது. ஆகவே தாயத்து அவனுடைய வாழ்வின் நிம்மதியை குலைக்கவில்லை'' என்றான்.

விக்கிரமனது இந்த சரியான பதிலினால் அவனது மவுனம் கலையவே, பழையபடி அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






## தபால்கார புறாக்கள்



**த**ற்காலத்தில் செய்தி அனுப்ப தபால், தந்தி, தொலைபேசி என்று எவ்வளவோ சாதனங்கள் உள்ளன. அந்தக் காலத்தில் புறாக்கள் மூலம் செய்திகள் அனுப்புவது வழக்கமாயிருந்தது. இப்போது நமது இந்தியாவில் புறாக்கள் மூலம் செய்திகள் அனுப்பப்படுகின்றன என்று அறிந்தால் நீங்கள் வியப்படைவீர்கள். ஆம், ஒரிஸ்ஸா மாநிலத்தில் கட்டக் நகரத்துக் காவல் துறையினர் இன்றும் கூட இந்த வழக்கத்தைக் கையாளு கின்றனர். கிட்டத்தட்ட ஆயிரம் புறாக்கள் ஓரிடத்தில் பராமரிக்கப்படுகின்றன. பயிற்சி அளிக்கப்பட்ட இந்தப் புறாக்கள் குப்பிகளில் செய்திகள் அடங்கிய கடிதத்தை கால்களில் கட்டிக் கொண்டு குறிப்பிட்ட இடத்திற்குப் பறந்து சென்று, செய்திகளைக் கொடுத்துவிட்டு, அவற்றுக்கு பதிலுடன் திரும்பி அன்றே புறப்பட்ட இடத்திற்கு வந்து சேருகின்றன.

## அதிசயமான சிவன் கோயில்



**பொ**துவாக எல்லா சிவன் கோயில்களிலும் சிவபெருமான் லிங்க வடிவத்தில் வழிபடப் படுகிறார். இமயமலையிலுள்ள அமர்நாத்தில் குளிர் காலங்களில் ஒரு குகையில் பனியினால் தானாகவே ஒரு சிவலிங்கம் உருவாகிறது. ஆனால் தமிழ்நாட்டில் சிதம்பரத்தில் சிவபெருமான் நடனமாடும் நடராஜப் பெருமானாக வழிபடப் படுகிறார். அதுமட்டுமல்ல, இந்தக் கோயிலில் பரத முனி இயற்றிய நாட்டிய சாஸ்திரத்தில் விளக்கப்படும் 108 விதமான தாண்டவக் கோலங்கள் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன.

## இந்தியப் புராதனக் கதைகள் - 26

# லாலு கேட்ட வரம்

**கா**சி தலத்தில் லாலு சேட் என்ற வட்டிக் கடை நடத்தும் பணக்கார ஆனால் மிகக் கருமியான மனிதர் வசித்து வந்தார். அவர் ஒரு பைசா கூட யாருக்கும் தானமாகத் தர மாட்டார். அவர் மனைவி மங்குபாய் எங்காவது பக்கத்து தலங்களுக்கு யாத்திரை சென்று வரலாம் என்று கெஞ்சினால் லாலு கோபத்துடன், ''என்ன உளறு கிறாய்! சிவபெருமானே இந்த ஊரில் குடி கொண்டுள்ள போது, நாம் மற்ற தலங்களுக்குச் சென்றால், அது அவரைஅவமதிப்பது போல் ஆகும்'' என்று சீறுவார்.

ஒரு பைசா கூட செலவழிக்க மனம் இல்லாததுதான் உண்மையான காரணம் என்று மங்குபாய்க்குத் தெரியும். அவள் தன் விதியை நொந்து கொண்டு காலம் கழித்து வந்தாள். சிவராத்திரி மறுதினம் காசியிலுள்ளோர் அனைவரும் கங்கை நதியில் புனித நீராடுவது வழக்கம். மங்குபாய் இதைப்பற்றி தன் கணவரிடம் சொன்னவுடன் வழக்கப் படி லாலு கோபம் கொண்டார்.

''நாம் நீராடப் போகும் இடத்தில் யாராவது புரோகிதர் பிரார்த்தனை செய்கிறேன் என்று ஏதாவது சொல்லி பைசா கேட்பார். ஒன்றும் தேவை இல்லை'' என்று மறுத்தார். ஆனால் மங்குபாய் மீண்டும் நச்சரிக்க ''சரி, வருகிறேன். ஆனால் ஆள் நட மாட்டமே இல்லாத இடத்தில் கங்கை நதி படித்துறையில் நீராடலாம் சரியா'' என்று ஒருவாறு சம்மதித்தார். அவ்வாறே புரோகிதர்கள் தென்படாத ஒரு பகுதியாகத் தேடிப்பிடித்து, லாலு மங்குபாயுடன் கங்கையில் நீராடத் தயாரானார். அப்போது உலகத்தவர்கள் கண்களுக்குத் தெரியாமல்





சிவனும் பார்வதியும் நீராட வந்த பக்தர்களை பார்த்துக் கொண்டிருந் தனர்.

அடியவர்களது பக்தியைக் கண்டு நெகிழ்ந்து போன பார்வதி, ''சுவாமி, நம்மிடம் எத்தனை பேர் பக்தியுடன் இங்கு வந்துள்ளார்கள்? இவர்கள் எல்லோருக்கும் நீங்கள் மோட்சம் கிடைக்கச் செய்யலாமே!'' என்று சிவபெருமானிடம் சொன்னாள். சிவபெருமான் புன்னகையுடன், ''அங்குள்ளவர்கள் ஏதோ நீராடுகிறார் களே தவிர யாருக்கும் மோட்சம் கிடைக்க வேண்டும் என்ற ஆர்வம் இல்லை,'' என்று பதிலளித்தார். பார்வதி, ''அதோ பாருங்கள், அங்கே ஒரு தம்பதியினர் ஆள் நடமாட்ட மில்லாத இடத்தில் நீராட உள்ளனர். அமைதியான சூழலை அவர்கள் நாடியுள்ளதன் காரணமே. தங்களிடம் முறையாக பக்தியுடன் பிரார்த்தனை செய்யத்தான் என்று நான் நினைக் கிறேன்'' என்றாள்.

மீண்டும் புன்னகையுடன் சிவ பெருமான் ''சரி அவரை சோதித்துப் பார்க்கலாம்,'' என்று கூறி ஒரு புரோகி தரின் உருவம் எடுத்து லாலுவை அணுகினார். புரோகிதரைப் பார்த்த வுடன் அதிர்ச்சி அடைந்த லாலு, '' வேண்டாம், உன் உதவி தேவை யில்லை. நீ எனக்கு பிரார்த்தனை செய்ய வேண்டாம்'' என்று அலறினார். ''குழந்தாய், உன்னைக் கட்டாயப் படுத்தவில்லை. உன்னால் எத்தனை முடியுமோ, அத்தனை தந்தால் போதும்'' என்றார் சிவ பெருமான். ''ஆகா! அப்படியானால் ஒரு பைசாதான் தருவேன். சம்மத மா?'' என்றார் லாலு. அதற்கு சிவ பெருமான் சம்மதிக்க நீராடி முடித்த தம்பதிகளுக்காக பிரார்த்தனை செய்து தட்சணைக்காக லாலுவிடம் சிவ பெருமான் கை நீட்டினார். ''நான் உடனே பணம் கொடுப்பேன் என்று சொல்லவில்லையே! பணம் வீட்டில் உள்ளது. என் வீட்டுக்கு வர முடியுமா?'' என்று லாலு பின் வாங்க, சிவபெருமான் லாலுவின் வீட்டுக்குச் சென்றார். பார்வதி கண்மறைவாக இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

லாலு வீட்டுக்குச் சென்று அங்கு மிங்கும் தேடுவது போல் பாசாங்கு செய்துவிட்டுத் தன்னிடம் ஒரு பைசா கூட வீட்டில் இல்லை என்றார். ''பரவாயில்லை நாளை வருகிறேன். எடுத்து வையுங்கள்'' என்று சிவபெருமான் விடை பெற்றார். மறுநாளும் லாலு பணம் இல்லை என்று நாடகம் ஆட, சிவபெருமான் மறுநாள் வருவதாகச் சொல்லிச்

சென்றார். இந்த நாடகம் பல நாட்கள் தொடர்ந்தன. அலுத்துப்போய் புரோகிதர் வராமலே இருந்து விடுவார் என்று லாலு எண்ண, சிவபெருமானோ விடாமல் வந்து கொண்டிருந்தார்.

ஒருநாள் லாலு ஒரு சதித்திட்டம் தீட்டி, தன் மனைவியிடம் புரோகிதர் வந்தால் தான் இறந்து விட்டதாகப் பொய் சொல்லச் சொன்னார். மங்குபாயும் வேறு வழியின்றி லாலு சொன்னபடி சிவபெருமானிடம் தன் கணவர்சற்றுமுன் இறந்து விட்டதாகச் சொன்னாள்.

''அடப்பாவமே'' என்று பொய்யாக வருத்தப்பட்ட சிவபெருமான் ''கவலைப்படாதீர்கள். ஒரு பைசா செலவில்லாமல் அவரது ஈமக் கடன்களை நான் செய்கிறேன். இதை அறிந்தால் அவரது ஆத்மா சாந்தி அடையும்'' என்று சொல்லி சிவபெருமான் இறந்தது போல் படுத்திருந்த லாலுவிடம் சென்றார். ''சரி, இவரது உடலை கங்கை நதியில் விட்டு விடுகிறேன்'' என்று சொல்லி லாலுவைத் தூக்கிக் கொண்டதும் ''இது ஏதடா வம்பு?'' என்று லாலு பயந்து விட்டார். உடனே துள்ளிக் குதித்து கீழேயிறங்கி மற்றுமொரு நாடகம் ஆடினார். ''நான் உண்மையிலேயே இறந்து விட்டேன். ஆனால் உங்கள் கை பட்டதும் பிழைத்து விட்டேன். மிக்க நன்றி'' என்றார் லாலு.

இப்போது சிவபெருமான் தன் சுய உருவத்துக்கு மாறினார். ''லாலு, பணத்தின் மீது உனக்குள்ள அபார பக்தியைக் கண்டு நான் வியக்கிறேன். ஆனால் இந்த பக்தி மோட்சத்தை அடைவதற்காக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? சரி, உனக்கு ஏதாவது வரம் வேண்டுமானால் கேள்'' என்றார். லாலு உடனே, ''நான் உங்களுக்குத் தர வேண்டிய ஒரு பைசாவை ரத்து செய்து விடுங்கள். இதுவே நான் விரும்பும் வரம்'' என்றார். ''ஆகட்டும்'' என்று கூறி சிவபெருமான் மறைந்தார்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பார்வதி, ''வரம் கேள் என்றால் இப்படிப்பட்ட வரம் கேட்கிறாரே? இவரது பணத்தாசைக்கும், கருமித்தனத்துக்கும் அளவே இல்லையா?'' என்று கேட்க, ''பொறு, உண்மையான தேவை எது என்று லாலுவுக்கு இன்னமும் தெரியவில்லை. அப்படிப்பட்ட மனமும், அறிவும் உண்டாகும் வரை, லாலு காத்திருக்கட்டும்,'' என்றார் சிவபெருமான்.



# ‘‘அசையாமல்’’ உலக சாதனை



கின்னஸ் உலக சாதனைகள் புத்தகம் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருப்பீர்கள். அதே போல் இந்தியாவில் நம் நாட்டவர் நிகழ்த்தும் நமது தேசிய அளவிலான சாதனைகளை லிம்கா புக்’ வெளியிடுகிறது. சமீபத்தில் புது தில்லியில் ‘லிம்கா ப நிறுவனத்தினர் நடத்திய கூட்டத்தி இந்திய சாதனையாளர்கள் முப்பது பேர் கூடியிருந்து சில சாதனைகளை நிகழ்த்தினர். அவர்களுள் ஒருவரான, விஜயவாடாவைச் சேர்ந்த சேஷுபாபு கின்னஸ் சாதனையில் இடம் பெ வேண்டி ஆடாமல் அசையாமல் 30 மணி நேரம் நின்று கொண்டிருந்தார்.

இந்த சாதனையைக் கண்டு கூட்டத்தில் இருந்த அனைவரும் பிரமித்துப் போயினர்.

# பற்களால் பலப்பரீட்சை

மலேசியத் தமிழர் வி.ராதாகிருஷ்ணன் 260டன் எடை கொண்ட 6 ரயில் பெட்டிகளை தன் பற்களினால் 15 அடி தூரம் இழுத்து ஒரு புதிய சாதனையை உண்டாக்கினார். இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களில் மலேசிய பிரதம மந்திரி திரு மஹாதீர் முகமதும் இருந்தார். குலாலம்பூரில் இந்த சாதனையைச் செய்து கின்னஸ் புக்கில் தன் பெயர் இடம் பெறும் தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் 37 வயதான ராதாகிருஷ்ணன் அவர்கள்.






தீமையை அழிப்பவன்.

பூமியின் மௌனமான பாதுகாவலர்களால் விரும்பப்பட்ட சூப்பர் மனிதன் இவன் தான். பேராசை, வெறுப்பு, தீமை மற்றும் பிடிவாதம் போன்றவை அவ்வளவு பூமியை பாதிப்பதை எதிர்த்துப் போராடக் கூடிய ஒரே சக்தி.

## ஆர்ப்

இறுதியில், பல வருடங்களுக்கான ஒரு தேடல் இப்போது முடிவடைகிறது. ஒரு புதிய வண்ணம் தன் இடத்தை எடுத்துக் கொள்கிறது. தீய சக்திகளுக்கு எதிராகப் போராடும் ஜி-மேனுக்கு உதவ, வழிகாட்ட மற்றும் ஆதரவு அளிக்க.


நிரந்தரமான இளமை
என்னுடையதாக இருக்கும்,
மூடக் கண்ணாடியே.


மேற்குத் தொடர்ச்சி மலைகளில் ஒரு இடத்தில்...
பஸ் போய்க் கொண்டிருக்கிறது கண்டாலா ஹில் ஸ்டேஷனுக்கு...


ஜன்னலுக்கு வெளியே கைய நீட்டாதீங்க.
திடீரென...




பஸ் ஆட ஆரம்பிக்கிறது.
பூகம்பம் இல்ல நிலச்சரிவுல பஸ் மாட்டிகிச்சுன்னு நான் நெனக்கறேன்.
டிரைவரினால் பஸ்ஸை கன்ட்ரோல் செய்ய முடியவில்லை.

சக்தியாய்ந்த எலக்ட்ரோமேக்னட்டுகளை உபயோகித்து ஒரு
ஹெலிகாப்டர் பஸ்ஸை சாலையிலிருந்து உயரத் தூக்கி செல்கிறது.

இதோ, கைக்போட்ராக் வந்தாச்




இந்தக் குழந்தைகளை மீண்டும் உயிருடன் பார்க்க முடியுமா? ஜீ-மேன் இவர்களை காப்பாற்றுவாரா? பகுதி II ஐ எதிர்பாருங்





# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**



சோனாபுரத்தில் பொதுமக்கள் சேர்ந்து ஒரு கோயில் கட்டி, தினசரி பூஜைக்காக ஒரு பூசாரியையும் நியமித்தனர். அந்தப் பூசாரி பேராசை பிடித்தவன். அங்குள்ள மக்களுக்கு இறைவனிடம் நம்பிக்கையும் பக்தியும் இருப்பதை அறிந்த பூசாரி அதை தனக்கு சாதகமாகப் பயன்படுத்தத் திட்டம் தீட்டினான்.

ஒருநாள் பூசாரி கோயிலுக்கு வரவேயில்லை. விஷயம் என்னவென்று அறிய, மக்கள் அவன் வீட்டுக்குச் சென்றதும் பூசாரி ''நேற்றிரவு கடவுள் என் கனவில் தோன்றினார். தனக்கு தினமும், பூசாரி பட்டு உடையும், கழுத்தில் தங்கச் சங்கிலியும் அணிந்துதான் பூஜை செய்ய வேண்டும் என்பது கடவுளின் கட்டளை,'' என்றான்.

இதைக் கேட்ட சோனாபுரத்து மக்கள் தங்களுக்குள் இதைப்பற்றி ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தனர்.

- பட்டு உடையும், தங்கச் சங்கிலியும் அணியும் அளவுக்கு, பூசாரியின் சம்பளத்தை உயர்த்துவது என்று மக்கள் முடிவு செய்தனரா?
- வேறு ஏதாவது கட்டளை கடவுள் பூசாரிக்குப் பிறப்பிக்கும் வரை தொடர்ந்து அதே முறையில் பூஜை செய்யச் சொல்வது என்று முடிவு செய்தார்களா?
- பூசாரியையே மாற்ற முடிவு செய்தார்களா?

உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப் போட்டி, ஜூன் மாதம் என எழுதி அனுப்பவும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்..

## முடிவு தேதி : ஜூன் 31, 2004

பெயர் ------------------------------------வயது-----------பிறந்த தேதி------------------

பள்ளியின் பெயர் ---------------------------------------------------------------------

வகுப்பு-----------------------------வீட்டு முகவரி---------------------------------------

------------------------------------------------------------------------------------------

--------------------------------------------------------------பின்கோடு-------------------

பெற்றோர் கையொப்பம்                    கலந்து கொள்வோரின் கையொப்பம்

சந்தமாமா இந்தியா லிமிடெட்

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# வழிப்போக்கன்

**ரா**ஜேந்திரபுரி நாட்டின் எல்லையில் ஒரு பாழடைந்த சத்திரம் இருந்தது. தொடர்ந்து பெய்த பெருமழையிலிருந்து ஒதுங்க, நான்கு வழிப்போக்கர்கள் அந்தச் சத்திரத்திற்குள் நுழைந்தனர். அவர்களில் இருவர் கண்ணியமான இளைஞர்கள். மூன்றாமவர் ஒரு வயதான சாமியார். நான்காமவன் காண்பதற்குப் போக்கிரி போல் தோற்றமளித்த ஒரு வாலிபன்.

தூக்கம் பிடிக்காததால், இரு இளைஞர்களும் தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தனர். மற்ற இருவரும் அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். இரு இளைஞர்களும் பரஸ்பரம் ஒருவரையொருவர் அறிமுகப்படுத்திக் கொண்ட பிறகு, அவர்களில் ஒருவனான சுநந்தன் ''உனக்கு எந்த ஊர்? நீ எங்கு செல்கிறாய்?'' எனக் கேட்க, அதற்கு மற்றொரு இளைஞனான ஆனந்தன் ''நான் வேலை தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். வேலை கிடைக்க பெரிய மனிதர்களின் சிபாரிசோ, அல்லது லஞ்சமோ தேவைப்படுகிறது. என்னிடம் பணமும் இல்லை. சிபாரிசுக்கும் யாரையும் தெரியாது. ராஜேந்திரபுரி நாட்டில் மட்டும்தான் அரசு நிர்வாகம் ஒழுங்காக நடப்பதாகவும், தகுதிக்குத் தகுந்த வேலை கிடைப்பதாகவும் கேள்விப்பட்டு அங்கே சென்று கொண்டிருக்கிறேன். நான் சமஸ்கிருதத்திலும், கணிதத்திலும் தேர்ச்சி பெற்றவன். இங்கு ஏதாவது ஆசிரியர் வேலை கிடைக்குமா என முயற்சி செய்ய வந்துள்ளேன்'' என்றான்.

உடனே சுநந்தன், ''இக்கரைக்கு அக்கரை பச்சை. நான் ராஜேந்திரபுரியில் தான் வசிக்கிறேன். உன்னுடைய நாட்டில் நிலைமை எப்படியிருக்கிறதோ, அதே போல்தான் இங்கேயும் உள்ளது. வாள் சண்டையிலும், குதிரைச்சவாரியிலும் தேர்ச்சி பெற்றவன் நான். எனக்கும் எந்த

'மிகி ஷீ'



வேலையும் இங்கே கிடைக்க வில்லை. நான் உன்னுடைய நாட்டில் ஒழுங்காக ஆட்சி நடப்ப தாகவும், தகுதிக்கு மதிப்பு தருகின்ற னர் என்றும் கேள்விப்பட்டு, அங்கு சென்று கொண்டிருக்கிறேன்'' என்றான் ''நமது இருவர் நாடுகளிலும் யார் இப்படி பொய்ப் பிரசாரம் செய்கிறார்கள் என்பது தான் தெரிய வில்லை'' என்றான் ஆனந்தன்.

உடனே சாமியார் குறுக்கிட்டு, ''நான் பல நாடுகளைச் சுற்றியவன். நீங்கள் சொல்லும் விஷயங்கள் எல்லா நாடுகளிலும் நடக்கின்றன. ஒரு அரசனால் மட்டுமே ஒழுங்கான ஆட்சியை மக்களுக்குத் தர முடியாது. அவன் கீழ் பணியாற்றும் அமைச்சர் கள் அதிகாரிகள் ஆகியோர்களது நேர்மையைப் பொறுத்துத்தான், முறையான நிர்வாகம் நடக்கும். தங்களது அரசனைத் திருப்திப் படுத்து வதற்காக ஒவ்வொரு நாட்டு அமைச் சர்களும் அதிகாரிகளும் அரசனிடம் இப்படியெல்லாம் பொய்ப் பிரசாரம் செய்கின்றனர். தங்களது சுயநலத்திற் காகவும் தங்கள் திறமையின்மையை மறைக்கவும் இப்படியெல்லாம் செய்கின்றனர்'' என்று நீண்ட பிரசங்கம் செய்தார்.

''இதை அரசனால் எவ்வாறு சரி செய்ய முடியும்?'' என்று கேட்டான் சுநந்தன். ''ஏன் முடியாது? முன் பெல்லாம் நாட்டு அரசர்கள் மாறு வேடமணிந்து குடிமக்களின் நடுவே அவர்கள் அறியாமல் சென்று அவர் களது குறைகளையும், கஷ்டங் களையும் நேரிலே கண்டறிவார்கள். அதற்குத் தகுந்த நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்வார்கள். ஆனால் இப்போதெல்லாம் அவ்வாறு அரசர் கள் செய்வதில்லை. அரசர்கள் செய்யத் தவறும் கடமைகளை, இளைஞர்களான நீங்கள்தான் அவர் களுக்கு எடுத்து உணர்த்த வேண்டும். குடிமக்களின் குறைகளை நீங்களே நேரில் கண்டறியுங்கள். அதிகாரி களை நீங்களே சந்தித்துப் பேசுங்கள். அவர்கள் தங்கள் கடமையிலிருந்து தவறினால், அதை நீங்களே அரசருக்கு எடுத்து உரையுங்கள். அரசன் நல்லவனாயிருந்தால் நீங்கள் கூறு வதைக் கட்டாயம் செவிமடுத்துக் கேட்பான். இப்போதுள்ள நிலைமை மாறும். உங்களைப் போன்ற இளை ஞர்களின் வாழ்வில் மறுமலர்ச்சி

ஏற்படும்'' என்றார். அப்போது திடீரென்று போக்கிரியைப் போல் தோற்றமளித்த மூன்றாவது வாலிபன் மற்றவர்கள் நடுவே வந்து அமர்ந் தான்.

சாமியாரை நோக்கி ''சுவாமி நீங்கள் இப்போது சொன்னதெல்லாம் நான் கேட்டுக்கொண்டிருந்தேன். இப் போது நாட்டில் நிலவி வரும் மோசமான சூழ்நிலை விரைவில் மாற நான் வழி வகுப்பேன்'' என்றான். பிறகு சுநந்தனை நோக்கி, ''சுநந்தா, ராஜேந்திரபுரியில் உனக்கு நல்ல வேலை கிடைக்குமாறு நான் ஏற்பாடு செய்கிறேன். ஆனந்த னுக்கும் தகுந்த வேலை கிடைக்க நான் ஏற்பாடு செய்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்ட மற்றவர்களுக்கு முதலில் ஒன்றுமே புரியவில்லை. மூவரும் ஆவலுடன் ''அதிருக் கட்டும். இப்படி வாக்குறுதிகள் கொடுக்கும் நீங்கள் யார்?'' என்று கேட்க. அந்த வாலிபன் புன் முறுவலுடன், ''நான்தான் ராஜேந்திர புரியின் இளவரசன் ரவிவர்மன். சீக்கிரமே எனக்கு பட்டாபிஷேகம் நடக்க உள்ளது. அரியணையில் அமர்வதற்கு முன் நாட்டின் நிலை மையை நானே நேரில் கண்டறிய விரும்பி இவ்வாறு மாறு வேடத்தில் வந்தேன்'' என்று கூறி தன் தலைப் பாகையை அவிழ்த்து மற்ற வேடத் தையும் கலைத்தான்.

பிறகு சாமியாரை நோக்கி, ''சுவாமி நீங்கள் சொன்னது முற்றி லும் சரி. அரசன் ஒருவனால் தனியாக ஆட்சியை திறம்பட நிர்வகிக்க இய லாது. அவன் கீழ் பணிபுரியும் அதி காரிகளின் ஒத்துழைப்பும் தேவை. உங்களைப் போன்ற அனுபவ சாலிகளின் உதவி எனக்கு எப்போதும் தேவைப்படும். எனது பட்டா பிஷேகத்திற்கு நீங்கள் கட்டாயம் வந்து என்னை ஆசீர்வதிக்க வேண்டு மென்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்'' என்றான் இளவரசன்.

சாமியார் மகிழ்ச்சியுடன் சரி என்று தலையசைத்தார். மற்ற இரு இளை ஞர்களும் இளவரசனை வணங்கித் தங்கள் நன்றியை தெரிவித்துக் கொண்டனர்.





# தகுதி எது?

**போ**திசத்வர் பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் அவனது. பண்டகசாலை அதிகாரியாக இருந்தார். அரசாங்கத்திற்கு வாங்கும் எந்தப் பொருட்களையும் மதிப்பிட்டு விலை கொடுப்பது பண்டகசாலை அதிகாரியின் வேலை. அவரும் பொன், குதிரை, தங்க, வெள்ளி நகைகள், பாத்திரங்கள் முதலியவற்றிற்குச் சரியான மதிப்புப் போட்டு விலை கொடுத்து வாங்கி வந்தார். விலைக்கு விற்றவர்களும் அவர் கூறிய விலை நியாயமானதே என்று ஏற்று மகிழ்ச்சியுடன் அந்த விலைக்கான பணத்தை வாங்கிச் சென்றனர்.

ஆனால் ஒரு நாள் திடீரென காசி மன்னன் மனதில் போதிசத்வர் கொடுக்கும் விலையைப் பற்றி சந்தேகம் ஏற்பட்டது. அப்போது தன் அறை சன்னலைத் திறந்தான். தோட்டத்தில் நெற்றி வியர்வை நிலத்தில் விழ தோட்டக்காரன் அங்கு வேலை செய்து கொண்டிருப்பதை அவன் பார்த்தான். அவர் ''ஆகா! இந்தத் தோட்டக்காரன் எவ்வளவு உண்மையாக வேலை பார்க்கிறான்.

இவனை போதிசத்வருக்கு பதிலாகப் பண்டகசாலை அதிகாரியாக நியமிக்கிறேன். இப்படி உண்மையாகப் பாடுபடுபவன் எல்லா வேலைகளிலும் உண்மையுடன் நடந்து கொள்வான்'' என எண்ணி உடனேயே அவனை அப்பதவியில் அமர்த்தினார். போதிசத்வரை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

புதிய அதிகாரிக்கு வியாபாரத்தில் அனுபவம் இல்லாததால் தன் இஷ்டம் போல் பொருட்களின் விலைகளை மதிப்பிடலானான். அது மிகமிகக் குறைவாக இருந்தாலும் தாம் அரசாங்கத்திற்கு கொடுக்கிறோமே என பயந்து பொருளை விற்பவர்கள் அந்த அதிகாரி கொடுத்த விலையை வாங்கிக் கொண்டு மனம் புழுங்கியவாறே சென்றனர். ஒரு நாள் அயல் நாட்டிலிருந்து ஒரு குதிரை



வியாபாரி தன் ஐநூறு உயர் ரக குதிரைகளை விற்க காசிக்கு வந்தான். புதிய அதிகாரி அக்குதிரைகளை மதிப்பிட்டு விட்டு ''இவற்றின் மதிப்பு அரைப்படி அரிசியே. இவனுக்கு அரைப்படி அரிசியைக் கொடுத்து போய் குதிரைகளை நம் லாயத்தில் கட்டுங்கள்'' என்றான்.

குதிரை வியாபாரி திகைத்துப் போனான். அவன் அந்த விலைக்கு விற்கச் சம்மதிக்காமல் நேராக போதி சத்வரிடம் போய் நடந்ததைக் கூறி, ''இது அநியாயம். ஐநூறு குதிரைகளின் விலை அரைப்படி அரிசியாம்! நீங்களே சொல்லுங்கள், இது அக்கிரமம் இல்லையா? இப்படியா என் வியாபாரத்தில் மண்ணைப் போட வேண்டும்?'' என்றான்.

போதிசத்வரும் ''இந்தப் புது அதிகாரியை சந்தோஷப் படுத்த முதலில் அவனுக்குக் கொஞ்சம் பணம் கொடு. பிறகு அவர் குதிரைகளுக்கு மதிப்புப் போட்ட விலை மிகச் சரியானதே என்றும் ஆனால் அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன என்பதை அரச சபையில் எல்லோர் முன்னிலும் சொல்ல வேண்டும் எனக்கேட்டுக் கொள். அவன் இதற்கு இணங்கினால் நாளை அரச சபைக்கு அழைத்துப் போ. நானும் அங்கு வந்து உனக்கு நியாயம் கிடைக்கச் செய்கிறேன்'' என்றார்.

அந்தக் குதிரை வியாபாரியும் போதிசத்வர்கூறியது போலவே புதிய அதிகாரியைக் கண்டு கொஞ்சம் பணம் கொடுத்து, அரச சபைக்கு வந்து அந்த அரிசியின் விலையை அவனால் கூற முடியுமா என்று கேட்டான்.

அந்த அதிகாரியும் ''ஏன் முடியாது? நாளையே நான் அரச சபையில் அதன் விலையைக் கூறுகிறேன்'' என்றான். மறுநாள் அரசசபையில் ஏராளமான மக்கள் கூடி இருந்தார்கள். போதிசத்வரும் அரசரின் அனுமதி பெற்று வந்து அமர்ந்திருந்தார்.

அப்போது அந்தக் குதிரை வியாபாரி பண்டகசாலை அதிகாரியோடு அரசனின் முன் வந்து ''அரசே இவர் என் குதிரைகளின் விலை அரைப்படி அரிசி என்றார். அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன என்பதை இவர் இப்போது கூற வேண்டும்'' என்றான்.

அரசனும் ''அப்படியா! ஐநூறு குதிரைகளின் விலை அரைப்படி அரிசி என்றால் அந்த அரைப்படி அரிசியின் விலை என்ன?'' என்று கேட்டார். அரசனுக்கு அதற்கு முன்

என்ன நடந்தது என்பது தெரிய வில்லை. பண்டகசாலை அதிகாரி யும் சற்றும் தயங்காமல் ''அந்த அரைப் படி அரிசியின் விலை இந்தக் காசி ராஜ்யமும் இதன் கீழே உள்ள மற்ற நாடுகளும் எவ்வளவு விலை பெறுமோ அவ்வளவு விலையாகும்'' என்றான்.

இந்தப் பதிலைக் கேட்டதும் அனைவரும் 'கொல்'லென்று சிரித் தார்கள். கைதட்டிக் கேலி செய் தார்கள். அப்போது வேறு ஒரு வியாபாரி ''அரசே! இவ்வளவு நாட்களாக நம் நாட்டை விலை மதிப்பிட முடியாதது என எண்ணி வந்தோம். இந்த அதிகாரி தன் அபார அறிவால் நம் நாட்டோடு மற்ற நாடுகளையும் சேர்த்து விலை மதிப்பு போட்டு அரைப்படி அரிசி எனக் கூறி விட்டாரே ஆகா! என்ன அறிவு எவ்வளவு திறமை'' என்று நை யாண்டி செய்தான்.

அப்போது போதிசத்வர் எழுந்து ''இந்த அதிகாரி கூறுவது உண்மை யே. இவரைக் கேலி செய்யாதீர்கள். ஐநூறு குதிரைகளின் விலை அரைப் படி அரிசி என்றார். அவர் அரைப்படி அரிசி விலை என்ன என்று கேட்ட போது அவர் இந்த நாடும் இதன் கீழுள்ள நாடுகளும் சேர்ந்த விலை என்றார். எனவே ஐநூறு குதிரைகளின் விலை இந்த நாடும் இதன் கீழுள்ள நாடுகளும் பெறும் மதிப்பிற்குச் சமம் என்று ஆகிறது. எனவே அந்த வியா பாரிக்கு இந்த விலை கொடுப்பது சரிதானே'' என்றார். இதைக் கேட்ட எல்லோரும் திகைத்துப் போனார்கள். தகுதி இல்லாத ஒருவனுக்கு உயர் பதவி அளிப்பதால் எவ்வளவு கெடுதல் விளையும் என்பதை அரசனும் அப்போது தான் உணர்ந் தார். உடனே அந்த அதிகாரியை விசாரிக்கவே அவன் முன்தினம் நடந்ததை எல்லாம் கூறி தான் அந்த வியாபாரியிடம் பணம் பெற்றுக் கொண்டு அரச சபையில் குதிரை களின் விலையைக் கூற இசைந்த தையும் சொன்னான்.

உடனே அரசன் ''இப்படி நீ லஞ்சம் வாங்கியதால் உன்னை இப்போதே இப்பதவியில்இருந்து நீக்குகிறேன்'' என அவனை நீக்கி விட்டு சத்வரையே மீண்டும் அப் பதவியில் அமர்த்தினான்.





# மகாவிஷ்ணு

இரணியகசிபு பிரகலாதனைப் பார்த்து ''பிரகலாதா! பேஷ்! உன்னைக் கொண்டு விஷ்ணுவைப் பழிக்குப் பழி வாங்கும் வாய்ப்பு கிடைத்து விட்டது'' எனக் கூறி நரசிம்மத்தோடு சண்டை போடலானான். நரசிம்மம் அவன் மீது பாய்ந்து தூக்கிக் கொண்டு அந்த சபாமண்டபத்தின் வாசல் படிக்குக் கொண்டு போயிற்று.

உள்ளேயும் வெளியேயும் இல்லாமல் இருக்கும் அந்த வாசல் படி மீது நரசிம்மம் இரணியகசிபுவை பகலும் இரவும் கூடும் மாலை நேரத்தில் ஆகாயத்திலும் பூமி மீதும் அல்லாது தன் தொடை மீது வைத்துக் கொண்டு தன் கூரிய நகங்களைக் கொண்டு கிழித்து நார் நாராக ஆக்கியது. பிரம்மா கொடுத்த வரங்கள் பொய்க்காமல் நரசிம்மாவதாரம் எடுத்து மகாவிஷ்ணு இரணியகசிபுவை இவ்வாறு கொன்றார்.

தம் மன்னனான இரணியகசிபு இறந்ததைக் கண்டு இராட்சஸர்கள் திகைத்துப் போனார்கள். மிக்க வலிமை கொண்ட அவனை மனிதனும் மிருகமும் அல்லாத ஒரு விசித்திர உருவம் அல்லவா கொன்று விட்டது! இனி அந்த உருவத்தை விட்டு வைப்பது தமக்கே ஆபத்து என அவர்கள் நினைத்தார்கள்.

ராட்சஸர்கள் அந்த உருவத்தை ஒழிக்க ஒன்று சேர்ந்து மகாவிஷ்ணுவைத் தாக்க வரவே அவர் தம் சக்கராயுதத்தைப் பிரயோகித்தார். ராட்சஸர்கள் அனைவரும் அழிந்தனர். கோர ரூபமாய்க் காட்சி அளித்த நரசிம்மரைக் கண்டு தேவர்களே நடுங்கலாயினர். அப்போது



பிரகலாதன் நரசிம்மரைத் துதித்து வணங்கி நின்றான். அவரும் சாந்தம் அடைந்தார்.

அவர் பிரகலாதனிடம் ''நீ உன் தந்தையின் ஈமக்கிரியைகளைச் செய். பிறகு சிம்மாசனத்தில் அமர்ந்து நாட்டை ஆள்'' எனக் கூறி ஆசீர்வதித்து விட்டு மறைந்தார். இவ்வாறு ஜெய விஜயர்களின் ஒரு பிறப்பு முடிவுற்றது. பிரகலாதனும் நீண்டகாலம் ஆட்சி புரிந்த பின் தன் மகன் விரோசனனுக்குப் பட்டம் கட்டி விட்டு காட்டிற்குப் போய் விஷ்ணுவை தியானித்துத் தவம் செய்து முக்தி பெற்றான்.

விரோசனனுக்குப் பின் அவனது மகன் பலி அரசனானான். பாற் கடலிலிருந்து வந்த உச்சச்சிரவம் என்ற குதிரையை அவன் தன் வசப்படுத்திக் கொண்டான். மயன் அவனுக்கு தரையிலும் நீரிலும் ஆகாயத்திலும் செல்லக் கூடிய ஒரு விமானத்தை அமைத்துக் கொடுத் தான்.

ராட்சஸர்களுக்கு அமிர்தம் கிடைக் காமல் தேவர்கள் ஏமாற்றி விட்டார் கள் என்று காரணத்தைக் கூறி அவன் தேவர்கள் மீது போர் தொடுத்தான். அமிர்தம் சாப்பிட்டதால் தமக்கு மரணமே இல்லை என்ற தைரியத்தில் தேவர்கள் ராட்சஸர்களை எதிர்த்தார் கள். கடும் போரில் ராட்சஸர்கள் படுதோல்வியுற்று இறக்கலானார்கள். அவர்களது குரு சுக்கிராச்சாரியார் தம் மிருதசஞ்சீவினி மந்திரத்தைக் கொண்டு இறந்த ராட்சஸர்களை உயிர்ப்பித்து வரலானார்.

தேவர்களோடு போர் புரிந்து தோல்வி கண்ட பலி பிறகு பூ மண்ட லம் முழுவதையும் தன் வசப்படுத்திக் கொண்டான். அதனால் அவனுக்கு பலிசக்கரவர்த்தி என்ற பெயர் ஏற் பட்டது. சுக்கிராச்சாரியார் அவனை நூறு அசுவமேத யாகங்கள் செய்ய வைத்தார்.

இதன் பின்னர் பலி மீண்டும் சொர்க்கலோகத்தின் மீது படை எடுத்து அதையும் தன் வசப்படுத்திக் கொண்ட பலி பாதாள லோகத்தையும் கைப்பற்றினான். அவனது ஆட்சியும் நல்ல முறையில் சட்டதிட்டங் களோடு நேர்மையாக நடைபெற்று வந்தது.

தேவர்களின் தாயான அதிதி தன் கணவரான கஸ்யபபிரஜாபதியிடம் தன் மைந்தர்கள் பலிக்கு பயந்து



சொர்க்கலோகத்தை விட்டு ஓடிப் போய் காட்டில் படும் அவஸ்தைகளைக் கூறி அவர்கள் மீண்டும் தேவலோகத்தை ஆளும் வழி என்ன என்று கேட்டாள். அவரும் அவளை விஷ்ணுவைக் குறித்துத் தவம் செய்யுமாறு கூறினார். அதிதியும் விஷ்ணுவைக் குறித்து தவம் செய்யவே விஷ்ணுவும் தாம் அவள் வயிற்றில் பிறந்து தேவர்களுக்கு விடிவுகாலம் வரச்செய்வதாக வாக்களித்தார். இதன் பின் அவர் அதிதிக்கும் கஸ்யபருக்கும் மகனாகப் பிறந்தார். மிகவும் குள்ளமாக இருந்த அவரை எல்லோரும் வாமனர் என அழைத்தார்கள். அவர் எல்லா சாஸ்திரங்களையும் கற்றார்.

அப்போது பலிசக்கரவர்த்தி நர்மதை நதிக்கரையில் மிகச் சிறந்த யாகமான விஸ்வஜித் யாகத்தை சுக்கிராச்சாரியாரின் மேற்பார்வையில் செய்து கொண்டிருந்தான். அவன் யாகத்தின் போது தாராளமாக தானங்களைச் செய்து கொண்டிருந்தான். அப்பொழுது வாமனர் அங்கு சென்றார்.

மிகுந்த ஒளிமிக்க முகத்தோடு வரும் வாமனரை பலிசக்கரவர்த்தி பயபக்தியுடன் வரவேற்றான். பிறகு அவன் ''ஐயா! தாங்கள் யாரோ?'' எனக் கேட்டான். அவரும் ''நான் வாமனன். உன்னை கண்டு தானம் பெறவே வந்தேன்'' என்றார். பலிசக்கரவர்த்தியும் ''அப்படியா? மிக்க மகிழ்ச்சி. உங்களுக்கு என்ன வேண்டும் கேளுங்கள், நீங்கள் என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்றான்.

அப்போது சுக்கிராச்சரியார் பலியை தனியே அழைத்துப் போய் ''இந்த வாமனர் உருவில் வந்திருப்பது சாட்சாத் மகாவிஷ்ணுதான். உன்னை ஏமாற்றி உன்னிடம் உள்ளதை எல்லாம் அவர் பறித்துக் கொள்ளப் போகிறார். எனவே அவர் என்ன தானம் கேட்டாலும் கொடுக்காதே'' என்றார்.

பலிசக்கரவர்த்தியோ ''நீங்கள் கூறுவது போல மகாவிஷ்ணுவே வந்து என்னிடம் தானம் கேட்கிறார் என்றால் அது எனக்கு எவ்வளவு பெருமைக்குரிய விஷயம்! மேலும் அவர் எதைக் கேட்டாலும் நான் கொடுப்பதாக வாக்களித்து விட்டேன்'' என்றான். சுக்கிராச்சாரியாரும் ''நான் சொல்வதைக் கேள்'' என்றார்.



இனி என்ன சொன்னாலும் பலி கேட்க மாட்டான் என்பதை சுக்கிராச்சாரியார் தெரிந்து கொண்டார். பலியோ வாமனர் இருக்கும் இடத்தை நோக்கிச் செல்லலானான். அப்போது சுக்கிரர் ''நான் உன்னை எச்சரித்து விட்டேன். இந்த வாமன ரான விஷ்ணு உன்னை ஏமாற்றி உன்னிடம் உள்ளதை எல்லாம் பிடுங்கிக் கொண்டு உன்னை அதல பாதாளத்தில் அமிழ்த்தி விடப் போகிறார். நீ இவ்வளவு கஷ்டப் பட்டு சம்பாதித்தது எல்லாம் ஒரே நொடியில் போய் விடப் போகிறது'' என்றார்.

பலியோ ''நான் தானம் கொடுத்தே தீர்வேன். இதன் விளைவு எப்படிப் பட்டதானாலும் நான் கவலைப்பட மாட்டேன். ஒரு பொருளைக் கொடுப்பதாகக் கூறி விட்டுப் பிறகு அதனை மறுப்பது என் போன்ற வீரனுக்கு அழகாகுமா?'' என்றான்.

சுக்கிராச்சாரியாரோ ''நான் உன் குலகுரு. உன் நன்மையை உத்தேசித்தே சொல்கிறேன்'' என்றார். பலியும் ''குருதேவரே! நான் அழிந்தாலும் பரவாஇல்லை. கொடுப்பதாகக் கூறிய தானத்தை இல்லை என்று சொல்லவே மாட்டேன். அப்படி என்னை மகாவிஷ்ணு ஏமாற்ற முயன்றால் அவருக்குத்தான் கெட்ட பெயர் ஏற்படும். ஆனால் நீங்கள் இப்போது கூறுகிறபடி நான் நடந்தால் என்னைத்தான் உலகம் தூற்றும்'' என்றான்.

சுக்கிராச்சாரியார் அவ்வாறு கூறியது பற்றிக் கவலைப்படவில்லை. ஏனெனில் தான் வாமனருக்கு வாக்குக் கொடுத்ததாகி விட்டது என்றும் அதன்படி நடந்து அதன் விளைவுகளை ஏற்பதே தன் தடமை எனவும் எண்ணிய பலிசக்கரவர்த்தியும் ''இவை எல்லாம் நிலைத்து இருக்கப் போகின்றனவா? என்றாவது ஒரு நாள் அழியத்தானே போகின்றன. நம் உடலே அழியக் கூடியது. எனவே இவை பற்றி எல்லாம் கவலைப் படுவதில் பயன் இல்லை'' என்றான்.

பலிசக்கரவர்த்தி தன் மனைவி விந்தியாவளியை நீர் கொண்டு வரச் சொல்லி வாமனரின் பாதங்களைக் கழுவி பூஜை செய்தான். பிறகு அவன் ''உங்களைப் போன்ற உத்தமர்கள் என்னிடம் தானம் கேட்பது நான் செய்த மாபெரும் பாக்கியமே. உங்களுக்கு என்ன வேண்டும் என்

பதைச் சொல்லுங்கள். அதனைக் கொடுக்கிறேன்'' என்றான்.

வாமனரும் ''எனக்கு என்ன வேண்டும்? என் காலால் மூன்றடி இடம் இருந்தால் போதும். அதில் இருந்து நான் தியானம் செய்ய முடியும். எனவே உன் பரந்த சாம்ராஜ்யத்தில் மூன்றடி நிலம் எனக்குக் கொடு. என் கால்களைக் கொண்டு அளந்து எடுத்துக் கொள்கிறேன்'' என்றான்.

''சரி. நீங்கள் கேட்கும் மூன்றடி இடத்தை இப்போதே தானமாக தாரை வார்த்துக் கொடுக்கிறேன்'' என பலிசக்கரவர்த்தி கூறி நீர் நிரம்பிய கிண்டியை எடுத்தான். அப்போது சுக்கிராச்சாரியார் சிறிய வண்டின் உருவம் எடுத்து அந்தக் கிண்டிக் குழாயின் வாயில் புகுந்து நீர் வராமல் அடைத்தார். வாமனரும் சிரித்தவாறே ஒரு தர்ப்பைப் புல்லை எடுத்து கிண்டியின் வாயைக் குத்தினார். அதனால் சுக்கிராச்சாரியாரின் ஒரு கண் போய் விட்டது. பலியும் ''உங்கள் காலால் நீங்கள் மூன்றடி இடம் எடுத்துக் கொள்ள தானம் செய்கிறேன்'' என்று கூறி தாரை வார்த்தான்.

மறு நிமிடம் வாமனர் தம் உருவைப் பெரிதாக்கி விசுவரூபம் கொண்டார். அவரது தலை எங்கே கால் எங்கே என்பது கூடத் தெரிய வில்லை. அவர் தம் காலால் பூமியையும் பாதாளம் முழுவதையும் ஒரு அடியாக அளந்தார். அதன் பின் ஆகாயம் முழுவதையும் இரண்டா வது அடியாக அளந்தார். பிறகு அவர் பலியிடம் ''பலிசக்கரவர்த்தி! மூன்றா



வது அடியை அளக்க இடம் இல்லை யே. எங்கே நீ காட்டு'' என்றார்.

பலிசக்கரவர்த்தியும் சட்டென்று ''இதோ என் தலை உள்ளது. அதன் மீது தங்கள் காலை வைத்து மூன்றா வது அடியாக அளந்து கொள்ளுங்கள் என்றான். விஷ்ணுவும் தம் விசுவ ரூபத்தை விட்டு மீண்டும் வாமன ரானார். அவர் தம் கால் மகாபலியின் தலை மீது வைத்து ''என் காலால் உன் தலையை அளக்க முடியாது போய் விடுமோ என்னவோ'' என்று சிரித்தவாறே கூறினார். அப்போது பிரகலாதன் அவர் முன் வந்து ''என் பேரன் பலி உங்கள் விரோதி யல்லவே. அவனுக்கு அனுக்கிரகம் செய்யுங்கள்'' என்று வேண்டிக் கொண்டான்.

விந்தியாவளியும் ''வாமனரே! என் கணவருக்கு எவ்விதக் கெடுதலும் நேராமலிருக்க அனுக்கிரக வேண் டும்'' என வேண்டிக் கொண்டாள். வாமனரும் ''உன் கணவருக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதற் காகத்தானே நான் இப்படி வாமனர் உருவில் வந்தேன். அவனது தான புண்ணிய பலம் மிகவும் சக்தி வாய்ந்தது. பலியைப் போல யாருமே இதற்கு முன் இருந்ததும் இல்லை. இனியும் இருக்கப் போவதில்லை. இவன் பாளதாளலோக அதிபதியாக இருந்து சுகமாக வாழ்ந்து வருவான்'' எனக் கூறினார். பிறகு அவர் தம வாமன உருவத்தை விட்டு விஷ்ணு வாகித் தன் திருப்பாதத்தை அவன் தலை மீது வைத்தார். பிறகு அவர் ''பலி! நீ உன் மனைவியுடனும் உன் தாத்தா பிரகலாதனுடனும் பாதாள லோகத்தில் பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ்வாய்'' எனக் கூறி ஆசீர்வதித்து விட்டு மறைந்தார்.

இப்படியாக விஷ்ணு வாமனராக அவதாரம் செய்து மகாபலியின் தானமகிமையை உலகிற்கு எடுத்துக் காட்டியதோடு தன் அருள் பெற்றவன் முடிவில் நல்ல கதியையே அடை வான் என்பதனையும் உலகிற்கு உணர்த்தினார்.



# சிறுவனிடம் ஏமாந்த பிசாசு



**ஆ**ப்பிரிக்கா கண்டத்து அடர்ந்த காடுகளில் ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தில் மோபுத்தோ என்னும் விவசாயி தன் மனைவி ஜேலியுடனும், தன் ஒரே மகன் ஏட்னேயுடனும் வசித்து வந்தான். அந்தக் கிராமத்து எல்லையில் மோபுத்தோவுக்குக் கொஞ்சம் நிலம் இருந்தது. அதில் அவன் சோளம் பயிரிட்டு வந்தான்.

ஒருநாள் மோபுத்தோவும் ஜேலியும் தங்கள் வயலை நோக்கிப் புறப்பட்டனர். வயலில் சோளம் அறுவடைக்குத் தயாராக இருந்தது. செல்லும் வழியில் பேசிக்கொண்டே வந்த மோபுத்தோ. ''நாளைக்கு அறுவடை செய்து கிடைக்கும் சோளத்தை மாமிசத்துடன் சேர்த்து சாப்பிடுவோம்,'' என்று சொல்ல, ஜேலி ''நாளைக்கு அறுவடை செய்தால் நாளைக்கே அதை எப்படி சாப்பிட முடியும்? அதை தோலுரித்து சுத்தம் செய்து தயார் செய்யவே ஒரு நாள் பிடிக்குமே,'' என்று பதில் சொன்னாள்.

இவ்வாறு அவர்கள் அறுவடையைப் பற்றித் திட்டம் இட்டுக் கொண்டு தங்கள் வயலை அடைந்ததும், இருவரும் திடுக்கிட்டனர். வயலில் அறுவடைக்குத் தயாராக இருந்த சோளக்கதிர்களில் பல மாயமாய் மறைந்திருந்தன.''

இருவரும் கவலையுடன் வீட்டுக்குத் திரும்பினர். பெற்றோர்களின் கவலையின் காரணம் கேட்ட ஏட்னே உடனே புத்திசாலித்தனமாக ''அப்பா, கவலைப்படாதே. நம் வயலுக்கு அருகில் ஒரு பெரிய குழி தோண்டி அதை இலைகளால் மறைத்து விடு. திருட வரும் மிருகம் அதன் மேல் காலை வைத்தால் குழிக்குள் விழுந்து விடும். நாம் பயிரையும் பாதுகாக்கலாம், தவிர சிக்கிக் கொள்ளும் மிருகத்தின் மாமிசமும் சாப்பிடலாம்'' என்று யோசனை கூறினான்.



அந்த யோசனையின் படி மோபுத்தோ மீண்டும் தன் வயலுக்குச் சென்று, வயலுக்கு அருகில் ஒரு பெரிய குழி தோண்டலானான்.

எப்படியோ ஒரு பெரிய குழி தோண்டி முடித்ததும் திடீரென ''என் காட்டில் எனது அனுமதி இல்லாமல் நீ எப்படி குழி தோண்டினாய்?'' என்ற ஒரு ஆண் பிசாசு அவன் முன் நின்றது. பிசாசைக் கண்ட மோபுத்தோ பயந்து நடுங்கினான். ''ஆண் பிசாசே! நான் குழி தோண்டியிருப்பது என் வயலை நாசம் செய்யும் மிருகத்தைப் பிடிப்பதற்காக,'' என்று பணிவுடன் கூறினான். ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. என் அனுமதியில்லாமல் எனக்கு சொந்தமான காட்டில் நீ செய்த வேலைக்கு, இப்போதே உன்னை நான் கொல்லப் போகிறேன்'' என்றது பிசாசு சீற்றத்துடன்.

''என்னை மன்னித்து விடு. என்னை நம்பி மனைவியும் பிள்ளையும் உள்ளனர்,'' என்று மோபுத்தோ பிசாசிடம் கெஞ்சினான். ''சரி, உன்னைப் பார்த்தால் பாவமாயிருக்கிறது. உன்னை விட்டு விடுகிறேன் ஆனால் இந்தக் குழியில் ஆண் மிருகம் எது விழுந்தாலும் நீ எடுத்துக் கொள். ஆனால் பெண் மிருகம் விழுந்தால் அதை எனக்குக் கொடுத்து விடு,'' என்றது பிசாசு. மோபுத்தோ, அதற்கு ஒப்புக் கொண்டு, அந்தக் குழியை இலை தழைகளால் மூடி விட்டுச் சென்று விட்டான். மறுநாள் மோபுத்தோ குழியில் ஏதாவது விழுந்திருக்கிறதா எனப் பார்க்கச் சென்றான். உடனே பிசாசும் தயாராக நின்றது. குழியில் ஓர் ஆண் குரங்கு விழுந்திருந்தது. மகிழ்ச்சியுடன் மோபுத்தோ குரங்கை எடுத்துச் சென்று விட்டான். மறு நாள் பார்த்தால் ஓர் ஆண் மான் குழிக்குள் விழுந்திருந்தது. ஒப்பந்தப்படி மானையும் மோபுத்தோ எடுத்துச் சென்று விட்டான்.

இவ்வாறு மோபுத்தோ குழிக்குள் காணும் போதெல்லாம் ஆண் மிருகம் விழுந்திருக்கக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தான். பிசாசு ஏமாற்றம் அடைந்தது. மோபுத்தோ வீட்டில் தினசரி இப்போது மாமிச உணவு உண்ண முடிந்தது. ஒரு மாதம் இவ்வாறு கழிந்தது.

இனிமேல் அறுவடை செய்து விடலாம் என்று எண்ணிய மோபுத்தோவுக்கு ஒருநாள் உடல் நலம் குன்றியது. தனக்குப் பதிலாக தன் மனைவியை வயலுக்கு அனுப்பி வைத்தான். ஆனால் மாலை நேரம் வந்ததும் ஜேலி வீடு திரும்பவில்லை. ''ஜேலிக்கு என்ன ஆயிற்று?'' என்று கவலையில் ஆழ்ந்த மோபுத்தோ தன் பிள்ளையுடன் வயலுக்கு ஜேலியைத் தேடிச் சென்றான். வயலை அடைந்த இருவரும் பெரும் அதிர்ச்சி அடைந்தனர். அன்று குழிக்குள் விழுந்திருந்தது வேறு யாருமல்ல ஜேலியேதான். உடனே பிசாசும் அங்கு தோன்றியது. பிசாசு மிகுந்த மகிழ்ச்சியுடன் ''இன்று முதன் முதலாகக் குழியில் பெண் மிருகம் விழுந்துவிட்டது. ஆகவே இவள் எனக்குத்தான்,'' என்று கூக்குரல் இட்டுக் கொண்டே கூத்தாடியது. மோபுத்தோ ''பிசாசே நீ சொல்வது சரியல்ல. இது பெண் மிருகம் அல்ல. ஜேலி ஒரு மனிதப் பிறவி. ஆகவே இவளை நீ எடுத்துக் கொள்ள முடியாது,'' என்று கெஞ்சினான்.

''அதெல்லாம் கிடையாது. மனிதன் என்பவனும் ஒரு மிருகம் தான். ஆகவே ஜேலி எனக்குத்தான்,'' என்று பிசாசு பிடிவாதம் பிடித்தது. இப்போது என்ன செய்வது என்று திகைத்துப்போய் மோபுத்தோ சிலை போல் நிற்கையில், ஏட்னேவுக்கு திடீரென ஒரு யோசனை தோன்றியது. அவன், ''பிசாசே! நீ சொல்வது சரி. ஒப்பந்தப்படி பெண் மிருகம் உனக்கே. நீ குழிக்குள் இறங்கி என் தாயைப் பிடித்துக் கொள்'' என்றான். உடனே பிசாசும் குழிக்குள் குதித்தது. ஜேலியும் மோபுத்தோவும் பயத்தில் அலற, ஏட்னே, ''அப்பா, குழிக்குள் விழும் ஆண் மிருகம் நமக்குத்தான். ஆகவே இந்த ஆண் பிசாசு இப்போது குழிக்குள் இருப்பதால் இது நமதே. வாருங்கள், இதை நாம் பிடித்துச் செல்லலாம்,'' என்று புத்திசாலித்தனமாகக் கூறினான். பிசாசு திடுக்கிட்டது. ''ஆஹா, நாம் மாட்டிக் கொண்டோமா!'' என்று யோசித்தது. பின், பிசாசு மோபுத்தோவை நோக்கி ''உன் மனைவியை நீ எடுத்துக் கொள்,'' என்று கூறி குழியை விட்டு வெளிவந்து காட்டிற்குள் மறைந்து விட்டது. மோபுத்தோ தன் மனைவி ஜேலியை குழிக்குள் இருந்து வெளியே கொண்டு வந்தான். இவ்வாறு சிறுவன் ஏட்னேயின் சாமர்த்தியத்தினால் அவன் தாய் தப்பிக்க, மூவரும் மிக்க மகிழ்ச்சியுடன் வீடு நோக்கிச் சென்றார்கள்.





# சிறந்த ஆசிரியர்

விலாசபுரியை ஆண்டு வந்த மன்னர் முதுமைப் பருவம் அடைந்தவுடன், ஆட்சிப் பொறுப்பை இளவரசன் வீரபத்திரனிடம் ஒப்படைத்து விட்டு, ''மகனே, நான் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட போது, நமது குடிமக்களில் பலர் கல்வியறிவு அற்றவர்களாக இருந்தனர். ஒரு ராஜ்ஜியம் சிறப்பாக விளங்க, அதன் குடிமக்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாக இருக்க வேண்டும். இதற்காகவே, நான் நமது தலைநகரில் ஒரு பள்ளியை நிறுவினேன். ஆயினும் அங்கு தகுதியுள்ள ஆசிரியர்களை நியமிக்க முடியாததால், என் விருப்பம் நிறைவேறவில்லை. ஆகவே நான் உன்னை வேண்டுவதெல்லாம், நமது பள்ளிக்கு ஒரு தரமான பேராசிரியரை நியமிப்பது தான். இப்படி நீ செய்தால், என் நீண்ட நாளைய விருப்பம் நிறைவேறும்,'' என்று மனம் திறந்து தன் மகனிடம் பேசினார். தன் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றுவதைத் தன் முதல் கடமையாகக் கருதிய வீரபத்திரன் தனது அவையில் அனைத்து அமைச்சர்களையும் வரவழைத்து இது பற்றி அவர்களுடன் ஆலோசித்தான். அவர்களுள் வயது முதிர்ந்த வாசஸ்பதி என்ற அமைச்சர் ''அரசே, கல்வி யார்வம் கொண்டவர்களுக்குத் தரமான கல்வி புகட்டி அவர்களை அறிவாளிகளாக்கவே தங்கள் தந்தை பள்ளியை உருவாக்கினார். ஆனால் அது நிறைவேறவில்லை,'' என்றார்.

''அது ஏன்?'' என்று இளவரசன் வீரபத்திரன் கேட்க, ''அறிவாளிகள் எல்லோரும் சிறந்த அசிரியர்களாக இருப்பதில்லை. நமது பள்ளியில் பல அறிவாளிகள் ஆசிரியர்களாக இருந்தும், அவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் திறமை இல்லை. ஆகவே சிறந்த மாணவர்களை உருவாக்குபவர்கள் யார் என்று நாம் தேடிப்

-சக்கரவர்த்தி-

பார்க்க வேண்டும்'' என்றார் வாசஸ்பதி.

இளவரசன் வீரபத்திரனுக்கு இது சரியெனப்படவே, திறமையான ஆசிரியர்களைத் தேட தன் ஒற்றர்களை நாடெங்கும் அனுப்பி வைத்தான். அப்படித் தேடிப் பார்த்ததில் தண்டகாரண்யத்தில் இருந்த பிரசாந்தர், பிரசேனர் என்ற இரண்டு திறமை வாய்ந்த ஆசிரியர்களைப் பற்றி அறிந்தான். அவர்களை பள்ளியில் நியமிப்பது குறித்து வாசஸ்பதியிடம் ஆலோசனை கேட்டான்.

அதற்கு வாசஸ்பதி, ''அரசே, நமது பள்ளியில் பயின்ற பிறகும் பயனில்லாமல் இருபது மாணவர்கள் இருக்கிறார்கள். இவர்களில் பத்து பேரை பிரசேனரிடமும், இன்னொரு பத்து பேரை பிரசாந்தரிடமும் கல்வி பயில அனுப்புவோம். ஆறுமாத காலத்தில் இந்த மாணவர்களுக்கு அவர்கள் இருவரும் எவ்வாறு கற்பிக்கிறார்கள் என்று கவனித்துப் பார்த்து பிறகு இருவரில் ஒருவரைத் தேர்வு செய்யலாம்,'' என்றார்.

இதன்படியே அந்த இருபது மாணவர்களில் பாதி பிரசாந்தரிடமும், பாதி பிரசேனரிடமும் கல்வி பயில அனுப்பப்பட்டனர். பிரசாந்தரிடம் சென்ற பத்து மாணவர்களில் மூன்று பேர் ஆறு மாத காலத்தில் கல்வியில் சிறந்து விளங்கினர். பிரசேனரிடம் சென்றவர்களில் ஏழு பேர் ஆறு மாத காலத்தில் சிறப்பாகப் பயின்றனர். இரண்டு ஆசிரியர்களும் வாசஸ்பதியை சந்திக்க தலைநகருக்கு வர



வழைக்கப்பட்டனர். வாசஸ்பதி முதலில் பிரசேனரிடம் ''ஏழு மாணவர்கள் தங்களிடத்தில் திறமையாகப் பயின்றனர். மற்ற மூவரைப் பற்றித் தங்கள் கருத்து என்ன?'' என்று கேட்டார். ''அந்த மூன்று மாணவர்கள் பிறவியிலிருந்தே அறிவற்றவர்கள். அவர்களை அறிவாளிகளாக மாற்ற முடியாது,'' என்று சொல்லிவிட்டார்.

பிறகு வாசஸ்பதி பிரசாந்தரிடம், ''சிறப்பாகத் தேர்ச்சி பெறாத தங்கள் ஏழு மாணவர்களைப் பற்றி தங்கள் கருத்து என்ன?'' என்று கேட்க, ''என்னிடம் நீங்கள் அனுப்பிய பத்து பேரில், இயல்பாகவே மூவர் அறிவாளிகள்.

ஆகவே எவ்வித சிரமுமின்றி நன்றாகப் பயின்றனர். மற்ற எழுவரும் அவ்வளவு அறிவாளிகள் இல்லை. அவர்களை ஆறுமாதத்தில்

சிறந்த மாணவர்களாக ஆக்க என்னால் இயலவில்லை. ஆனால் நீங்கள் இன்னும் சில மாதங்கள் அனுமதித்தால், அவர்களையும் அறிவாளிகள் ஆக்க என்னால் முடியும்,'' என்றார்.

வாசஸ்பதி வீரபத்திரனை சந்தித்து நடந்த விஷயத்தைக் கூறி, ''அரசே, பிரசாந்தரே நமது பள்ளியில் நிய மிக்கத் தகுதியானவர்,'' என்றார். வாசஸ்பதி கூறியதைக் கேட்டு வீரபத்திரன் வியப்படைந்தான். தன்னிடம் பயின்ற பத்து மாணவர்களில் ஏழுபேரை நன்கு தேர்ச்சி பெறச் செய்த பிரசேனரை விடுத்து, மூவரை மட்டுமே தேர்ச்சி பெறச் செய்த பிரசாந்தரை நீங்கள் ஏன் தேர்வு செய்தீர்கள்?'' என்று கேட்டான். அதற்கு வாசஸ்பதி, ''அரசே, நமது பள்ளியில் பயின்ற மிகச் சாதாரண ரகத்தைச் சேர்ந்த இருபது மாணவர்களிலிருந்து பத்து பேரைத் தேர்ச்சிப் பெறச் செய்த இருவருமே திறமை மிக்கவர்கள் தான். ஆனால் பத்து மாணவர்களில் யாரிடம் பயின்று அதிகம் பேர் சிறந்த அறிவாளிகள் ஆனார்கள் என்பதை வைத்து, ஆசிரியரின் திறமையை மதிப்பிட முடியாது. பிரசேனர் தன் மாணவர்களில் மூவரை இயல்பாகவே அறிவற்றவர்கள் என்றும் அவர்களால் தேர்ச்சி பெறவே முடியாது என்றும் திட்டவட்டமாகக் கூறினார். இப்படி ஓரேயடியாக தன் மாணவர்களுக்கு படிப்பே வராது என்று ஓர் ஆசிரியர் கூறுவது சரியில்லை'' என்றார். ''மேலே சொல்லுங்கள்,'' என்றான் வீரபத்திரன்.

''அரசே, பிரசாந்தர் இன்னும் சிறிது அவகாசம் கிடைத்தால் தன் எஞ்சியுள்ள ஏழு மாணாக்கர்களையும் அறிவாளிகள் ஆக்கி விடுவேன் என்று அவர் சொன்னது அவரது திறமையையும் தன் பயிற்றுவிக்கும் கலையில் உள்ள தன்னம்பிக்கையையும் காட்டுகிறது. எனவே பிரசாந்தர் தான் இந்தப் பதவிக்குத் தகுதியானவர் என்பது என் கருத்து.'' என்று முடித்தார் வாசஸ்பதி.

வாசஸ்பதி கூறியதை முழுதும் ஒப்புக் கொண்ட வீரபத்திரன் பிரசாந்தரையே தனது பள்ளியின் ஆசிரியராகப் பணி நியமனம் செய்தான்.





# பெரிய இடத்து விருந்து

ஒரு கிராமத்தில் ஒரு பணக்கார ஜமீன்தாரர் இருந்தார். அவர் மிகவும் கர்வம் பிடித்தவர். அந்த கிராமத்தில் பெரும்பாலும் விவசாயிகளும் கூலி வேலை பார்ப்பவர்களுமே இருந்தனர். அதனால் கிராமத்திலுள்ள மக்களை அவர் மதிப்பதேயில்லை. அவர் கிட்ட நெருங்கிச் சென்று பேசக் கூட அவர் யாரையும் அனுமதிப்பதில்லை. அந்த கிராமத்தினர் யாவரும் ஜமீன்தாரரிடமிருந்து தள்ளி வெகு தூரத்தில் நின்று தான் பேச வேண்டும்.

ஒருநாள் அந்த கிராமத்தில் விவசாயிகள் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். ஒருவன், ''இன்று ஜமீன்தாரருடன் என்னால் தொலை தூரத்தில் நின்று தான் பேச முடிந்தது'' என்று சொல்லிக் கொண்டிருந்தான். மற்றொரு விவசாயி'' உங்களால் முடிந்தது அவ்வளவுதான். என்னை எடுத்துக் கொள்ளுங்கள். நான் நினைத்தால் ஜமீன்தாரரை அவர் வீட்டில் சாப்பிடுவதற்கு என்னை அழைக்கும்படிக் கூட செய்ய முடியும்'' என்று பெருமையாக பேசினான்.

இவ்வாறு அவன் கூறுவதைக் கேட்ட மற்ற விவசாயிகள் ''வீணாகப் பொய் சொல்லாதே என்பார்கள்.

''நான் சொல்வதை என்னால் செய்ய முடியும்'' என்று சாதித்தான். ''சரி, நீ மட்டும் சொன்னபடி செய்து காட்டி விட்டால் உனக்கு நாங்கள் எல்லோரும் சேர்ந்து அறுபது சேர் தானியங்களும், ஒரு ஜோடி காளை மாடுகளும் தருகிறோம்,'' என்று சவால் விட்டனர். ''விவசாயி சவாலை ஏற்றுக் கொண்டு, ஜமீன்தாரர் வீட்டை நோக்கிக் கிளம்பினான்.

ஜமீன்தாரர் வீட்டுக் காவலாளிகள் விவசாயியை வழிமறித்தனர். ''எனக்கு ஜமீன்தாரரிடம் ஒரு நல்ல செய்தி சொல்ல வேண்டும்'' என்றான். காவலாளிகள் ஜமீன்தாரருக்கு இதைத் தெரியப்படுத்த, ஜமீன்தாரர் அவனை உள்ளே விட அனுமதித்தார்.

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -

விவசாயியைக் கண்டதும் ''நீ என்ன நல்ல விஷயம் எனக்குச் சொல்லப் போகிறாய்?'' என்றார்.

''ஐயா, அதைத் தனிமையில் தான் சொல்ல முடியும்'' என்று விவசாயி தயங்கவே, ஜமீன்தாரர் மற்றவர்களை வெளியே போகச் சொன்னார். பின் அவனைச் சொல்லும்படி கேட்க விவசாயி, ''ஐயா, ஒரு குதிரை சுமக்கும் அளவுள்ள தங்கம் என்ன விலை இருக்கும்?'' என்று கேட்டான். ''அது தெரிந்து உனக்கு என்ன ஆக வேண்டும்?'' என்று ஜமீன்தாரர் கேட்க ''ஐயா, அது மிக முக்கியமான விஷயம். தெரிந்தால் சொல்லுங்கள், மிக அவசரம்'' என்றான்.

ஓகோ, இவனுக்கு நிறைய தங்கம் கிடைத்துள்ளது போலும் என்று எண்ணிய ஜமீன்தாரர் மிகுந்த ஆர்வத்துடன் ''சற்று விளக்கமாகச் சொல்'' என்றார். ''எனக்குப் பசிக்கிறது. வீட்டுக்குப் போய் சாப்பிட்டு விட்டு பிறகு வந்து உங்களைப் பார்க்கிறேன்'' என்றுகிளம்பினான். தன் ஆர்வத்தை அடக்க முடியாமல் ''நீ இங்கேயே சாப்பிட்டுவிட்டு எனக்கு விளக்கமாகச் சொல்,'' என்றார்.

அதன்படியே விவசாயி அவர் வீட்டில் வயிறார சாப்பிட்டான். சாப்பிட்டவுடன் அவனை உடனே வரச்சொன்ன ஜமீன்தாரர் ''இப்போது சொல்.. உன்னிடம் எவ்வளவு தங்கம் இருக்கிறது?'' என்றார். அதற்கு விவசாயி ''தங்கமா? என்னிடம் ஏது தங்கம்? எனக்கு அறுபது சேர் தானியமும் ஒரு ஜோடி காளைமாடுகளும் கிடைக்க இருக்கின்றன. அவற்றின் மதிப்பு ஒரு குதிரை சுமக்கும் அளவு உள்ள தங்கத்தின் மதிப்பு இருக்குமா?'' என்று அப்பாவி போல் நடித்தான். ''முட்டாள்! இத்தனை நேரம் என்னுடன் விளையாடினாயா? யாரங்கே! இவனைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுங்கள்'' என்று சீறினார் ஜமீன்தாரர்.

விவசாயி உடனே வெளியே ஓடி வந்து விட்டான். எப்படியோ? தான் போட்ட பந்தயத்தில் வென்றதால் அறுபது சேர் தானியமும், ஒரு ஜோடி காளை மாடுகளும் பெறக் கிளம்பினான்.



சாந்திபுரத்தின் அரியணையை அபகரிக்க வீரசிம்மன் போட்ட திட்டம் தோல்வியுற்றது. அவனது படைவீரர்களுக்கு ஆயுதங்கள் மிகவும் தேவையாயிருந்தன. ஜமீன்தாரர்களிடமிருந்து அரிசியை சேகரித்து அதற்கு பதிலாக ஆயுதங்கள் வாங்கலாம் என்று புதுத்திட்டம் இடுகிறான். ஜமீன்தாரர்களிடமிருந்து பலவந்தமாகப் பிடுங்கி சேகரிக்கப்பட்ட அரிசியை, குடி மக்கள் பாதி வழியில் கவர்ந்து கொள்கின்றனர். இனி....

11

# சூர்யா

வீர இளவரசனின்
துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

வரி என்ற பெயரில் அரிசியை சேகரிக்கும் முயற்சி தோல்வியுற்றதால் வீரசிம்மன் கோபமாயிருக்கிறான்.

அந்தக் கொள்ளைக் காரர்களைப் பிடியுங்கள்

அவர்களுக்கு தண்டனை கொடுப்போம்

அரிசியானது ஜமீன்தாரர்களுக்கு விதிக்கப்பட்ட புதிய வரி.

வரியா? என்ன வரி?

ஜமீன்தாரர்கள் வரி கொடுக்க வேண்டும்

ஏன்?

நாங்கள் அரிசியைக் கொடுத்து ஆயுதங்கள் வாங்கிக் கொள்வோம்.

அதற்கு அவசியம் என்ன?

முட்டாள்களே! போர் செய்ய எங்களுக்கு ஆயுதம் தேவை


ஆனால் சாந்திபுர வாசிகள் யாரிடமும் போர் செய்யப் போவதில்லையே!
நமது ஆட்களும் ஆயுதங்களும் நாசமானதுதான் மிச்சம்.
வாயை மூடு!
திடீரென ஓர் அம்பு பாய்ந்து வந்து சுவற்றில் மோதி கீழே விழுகிறது.
அதில் ஏதோ செய்தி இருக்கிறது.


வீரசிம்மன் அம்பை எடுக்கப் போன அமரசிம்மனைத் தடுக்கிறான்.
அது என்ன?
முட்டாளே! யார் அம்பை எய்தது என்று முதலில் பார்.


யாரென்று வெளியில் சென்று வீரசிம்மன் பார்ப்பதற்குள், அம்பை எய்தவன் குதிரையில் தாவியேறி ஓடி விட்டான்.
நில். யார் நீ?
பிடியுங்கள் அவனை.


அமரசிம்மன் மனமுடைந்து இருக்கிறான். வீரசிம்மனால் தனக்கிழைக்கப்பட்ட அவமானத்தை அவனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை
மகாராஜா! இந்த கைக்குட்டையில் ஏதோ எழுதியிருக்கிறது


நாங்கள் கொள்ளைக்காரர்கள் அல்ல. உன்னுடைய ஆட்கள்தான் எங்களிடம் இருந்து அரிசியைக் கொள்ளை அடித்தனர். எங்களால் ஆயுதங்களை உண்ண முடியாது.


பார்! என்னுடைய வார்த்தைகளை திருப்பி எனக்கெதிராக யாரோ எழுதியிருக்கிறார்கள்! இந்த சபையில் யாரோ ஒற்றர்கள் இருக்கிறார்கள்.


அந்தப் போக்கிரி யார்? அவனைக் கைது செய்திருக்கிறீர்களா?
இல்லை மகாராஜா. பிடிப்பதற்கு முன் அவன் தப்பி விட்டான்.


யாரோ ஒருவன் உள்ளே வந்து அம்பு எய்து விட்டுப் போகிறான். முதலில் நம் காவலர்களை மாற்றுங்கள்.
இது ஏதோ சூழ்ச்சி.


எல்லையில் காவலைப் பலப் படுத்துங்கள். நமது வீரர்களை நாலா திசையிலும் அனுப்புங்கள்.
ஆகட்டும் மகாராஜா


தனது படைத்தலைவர்களைக் கூப்பிட்டு ஆலோசனை செய்கிறான்.
எந்த நேரமும் நாம் போர் தொடுக்கத் தயாராயிருப்போம்


வீரர்களின் போர்ப் பயிற்சி நடைபெறுகிறது


கூடாரத்திற்கு அருகில் ஒருவன் நின்றிருந்தான்.
மானவேந்திரனை எச்சரிக்கை செய்ய வேண்டும்.
தொடரும்

# எரிவாயு சிக்கனம்



விடுமுறைக்குத் தன் அத்தை வீட்டிற்குச் சென்றிருந்த வீணா வீடு திரும்பியதும், ''அத்தை வீட்டில் பொழுது போயிற்றா?'' என அவளுடைய அம்மா கேட்டாள்.

''மிகவும் நன்றாக பொழுது போயிற்று. நான் சுப்ரியாவுடன் சேர்ந்து சமையல் செய்யக் கற்றுக் கொண்டேன்'' என்றாள் வீணா.

''வேறு என்னவெல்லாம் கற்றுக் கொண்டாய்?'' என அம்மா கேட்க, ''அம்மா, எரிவாயுவை எப்படி சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டும் என்பது பற்றி அத்தையிடமிருந்து கற்றுக் கொண்டேன். அதாவது சமையல் பொருட்களை முன்கூட்டியே ஊற வைப்பதன் மூலமும், எல்லாப் பொருட்களையும் தயார் நிலையில் வைத்துக் கொண்ட பிறகு அடுப்பைப் பற்ற வைப்பதன் மூலமும், எரிவாயுவை சிக்கனமாக செலவழிக்கலாம் என்று தெரிந்து கொண்டேன்,'' என்றாள் வீணா.

''நல்லது. எரிவாயு சிக்கனத்திற்காக நீ தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இன்னும் சில உள்ளன'' என்று அவளை சமையல் அறைக்கு அழைத்துச் சென்று சமையல் பாத்திரங்களை காண்பித்தாள். ''குக்கரில் சமைப்பது சிறந்தது. அது இயலாத போது இந்த மாதிரி அகலமான அடிப்பாகமும், குறைவான உயரமும் கொண்ட பாத்திரங்களையேப் பயன்படுத்த வேண்டும். பாத்திரங்களை மூடி கொண்டு மூடிவிட்டு சமைத்தால் வெப்பம் வீணாவதைத் தடுக்கலாம்'' என்ற வீணாவின் அம்மா, தொடர்ந்து ''பதார்த்தங்கள் அடுப்பில் கொதிக்கத் தொடங்கியதும் தீச்சுவாலையை குறைத்து விட வேண்டும். தவிர பர்னர்களை அடிக்கடி சுத்தம் செய்வதன் மூலம், எரிவாயு சீராகப் பாய்ந்து அடுப்பு முறையாக வேலை செய்யும்'' என்று சொல்லி முடித்தாள்.

''அப்படியா? நான் இன்றும் பல விஷயங்களை உன்னிடமிருந்து தெரிந்து கொண்டேன். சமையலறையை நீ ஒரு வகுப்பறையாக மாற்றி விட்டாய்,'' என்றாள் வீணா.

## உங்கள் விஞ்ஞானம்

# உங்கள் குரல்



உங்கள் குரலின் தனிப்பட்ட அதிசய மான குணம் என்ன தெரியுமா? உலகில் ஒருவர் குரல் போல் மற்றொருவரது குரல் இருக்கவே இருக்காது. இரட்டைப் பிறவிகளுக்குகூட குரல் ஒரே மாதிரி இருப்பதில்லை.

நாம் பேசும்போது நம் தொண்டைக் குழியில் மிகத்துரித காலத்தில் நூற்றுக் கணக்கான தசைகள் இயங்குகின்றன. நமது குரல் பெட்டிக்கு பலதரப்பட்ட ஒலிகளை உண்டாக்க முடியும். நமது குரல்வளையிலுள்ள குரல் பெட்டி உறுதியான இரு வரிசை கொண்ட தசைகளும் இடையே இடைவெளியும் கொண்டது. இந்தக் குரல் பெட்டி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ரகத்தில் உள்ளது. பொதுவாக ஆண் களின் குரல் பெட்டி கட்டையான குரல் ஒலியையும் பெண்களுடையது மெலி தான ஒலியையும் உண்டாக்கக் கூடியது.

## உங்கள் சுற்றுப்புறம்

# அதிசய மரம்

ஆப்பிரிக்க, ஆஸ்திரேலிய நாடுகளில் 'பேவோபேப்' எனப்படும் அதிசயமான மரம் ஒன்று உள்ளது. ஒரு மரத்தை வேருடன் பிடுங்கித் தலை கீழாகக் கவிழ்த்தால், எப்படி இருக்குமோ, அவ்வாறு இந்த மரம் தோற்றமளிக்கும். 60 அடி உயரம் வளரும் இந்த மரத்தின் அடிப்பாகம் 30 அடி அளவு வரை பருமனாக இருக்கும். இந்த மரம் இலைகளை எல்லாம் சில சமயம் உதிர்த்துவிட்டு, கிளைகள் மொட்டையாக ஆனால் வேர்களைப் போல தோற்றமளிப்பது உண்டு. அடிமரம் தாமிர நிறத்தில் ஒளிரும். மிகவும் வியப்பான விஷயம் என்னவென்றால் இந்த மரம் 3000 ஆண்டுகள் வரை உயிருடன் இருக்குமாம்.



## உங்களுக்குத் தெரியுமா?

# பூட்டும் சாவியும்

உலகத்தில் பூட்டு சாவி எப்போது கண்டு பிடிக்கப்பட்டன என்று தெரியுமா? 5000 ஆண்டுகளுக்கு முன் எகிப்தியர்கள் முதன் முதலாக பூட்டு சாவிகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். எகிப்தில் உள்ள நினாவேவில் இவைக் காணப்பட்டன. மரத்தில் செய்யப்பட்ட நீண்ட உருண்டை வடிவமானக் கம்பிகள் கதவில்



பொருத்தப்பட்டு, அவை நிலையில் உள்ள துவாரத்துக்குள் செலுத்தப் பட்டுப் பூட்டாகப் பயன்பட்டது. நிலையிலுள்ள துவராத்தின் மேற்புறம், இன்னும் சில துவாரங்கள் ஏற்படுத்தப் பட்டு அவற்றினுள் மரத்தால்ஆன சிறிய கம்பிகள் பொருத்தப்பட்டிருந்தன. இவை நீண்ட கம்பிலுள்ள துவாரத்தில் பொருந்தி கதவுகள் பூட்டப்பட்டன.

இந்தச் சிறிய கம்பிகளை மேலே தூக்கிவிட்டுப் பூட்டைத் திறக்கப் பயன்படுத்தப்பட்ட கருவிகள் சாவியாகப் பயன்பட்டன.

## அறிவு வளர

# பக்தர்களும், மகான்களும்



1. அரண்மனை வாழ்வு, சுக போகங்களை விடுத்து பகவான் கிருஷ்ணரிடம் பெரும் பக்தி பூண்டிருந்த இளவரசி யார்?



2. ஆதி கிரந்த் என்னும் சீக்கிய மத நூல் எந்த சீக்கிய குருவால் இயற்றப்பட்டது?



3. மகாராஷ்டிரா, அகமது நகரில் தோன்றிய ஒரு மகானை இந்து மற்றும் முஸ்லிம் ஆகிய இரு மதத்தினரும் மிகவும் போற்றி பக்தி செலுத்தினர். அவர் யார்?



4. ஆதி சங்கரர் தமிழகத்தில் எந்த ஊரில் தனது ஐந்து மடங்களில் ஒன்றை நிறுவினார்?



5. ராமானுஜர் தோற்றுவித்த மடத்தின் பெயர் என்ன?

(விடைகள் 70ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



SOURAA



SOURAA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு ஆகஸ்ட் 2004 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

**ஏப்ரல் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில்**

**வெற்றி வெற்றவர் :**

**பா. சுவாமிநாதன்**

புதிய எண் 80, பழைய எண் 35
31வது மா.பொ.சி.தெரு
ஜி.கே.எம்.காலனி,
ஜவஹர் நகர் போஸ்ட், சென்னை-82

**பரிசு பெற்றவை**



கலைமிகும் பணி
கலைக்கும் பணி

## 'அறிவை வளர்க்க?' விடைகள் (பக்கம் 68)

1. மீரா
2. குருநானக்
3. ஷீர்டி சாயிபாபா
4. காஞ்சிபுரம்
5. அஹோபில மடம்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)



Good news for young bookworms!



**Hiya! What has hit the animal world?**

**Listen hard and look keenly.**

**Do you hear the jingle of the jungle?**



# JUNGLE JINGLES




*Hurry, grab a copy!*

A set of five story books
with the whackiest and most
interesting collection of animal stories
ever written.



From

CHANDAMAMA and Popular prakashan

AVAILABLE AT
ALL LEADING
BOOK STORES

